ஓம் பரப்பிரம்மணே நம: 80-பக்கங்கள்.

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ்.ஜி. இராமாநுஜலுநாயுடு

"எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.)

COPY RIGHT | REGISTERED.

| | | |
|---|---|---|
| கமலம்-7. | சென்னை ஆங்கீரஸ௵ பங்குனிமீ 1உ | இதழ் 84. |
| Vol. 7. | 1933-ம்௵ மார்ச்மீ 13உ | No 84. |




"ஒருவனு யெங்குந் தோன்றி" என்றவாறு யார் உலகத்தைப் படைத்தவரோ, உலகத்தை யறிந்தவரோ, ஆத்மாக்களுக்குக் காரணரோ, ஞானமுள்ளவரோ, காலத்திற்குத் தலைவரோ, குணத்தை யுடையவரோ, அவர் அசித்துப் பொருள்—சித்துப் பொருள் இரண்டையும் காப்பவர். குணங்களுக்குத் தலைவர். ஸம்ஸாரத்தினது நிலைக்கும், பந்த மோக்ஷங்களுக்கும் காரணராவர். அந்த ஆதிமூலப்பொருளை ஸ்தோத்தரிக்கக்கடவோம்.

ஃ

யாரில் இந்தப் பிரபஞ்சம் சுழன்றுகொண்டிருக்கின்றதோ; அவர்—உலகம், காலம், உருவமுடைய பொருள்கள், இவை யெல்லாவற்றையும்விடச் சிறந்தவர், வேறானவர். அவர் தருமத்திற்கு மூலமானவர். பாபத்தைப் போக்குகிறவர். செல்வத்திற்குத் தலைவர். அவர் எல்லா உயிர்களுக்கும் உள்ளே யிருப்பவர். அழிவற்றவர். உலகத்திற்கு ஆதாரமானவர். அவர் நன்மையே வடிவாக உடையவர். உலகத்தைச் சூழ்ந்திருக்கிற ஒரு தனி வஸ்து அவர். அவரை யறிந்து உயிர்கள் மிகச் சாந்தியைப் பெறுகின்றனர்.

ஃ

பரமாத்மாவானது பூரண ஞானமும், பூரண சக்தியுமுடையது. ஜீவாத்மாவானது அந்தப் பரமாத்மாவினிடத்திலிருந்து மிதசக்தியையும், மிதஞானத்தையும் பெற்று, மனம், புத்தி, சித்தம், அஹங்காரமாகிய அந்தக்கரணங்களையும்; மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய சிநேகிதர்களையும்

கொண்டு உலக நாடகத்தில் நடிக்கிறது. பக்தரென்றது—ஸம்சாரிகளே; முக்தரென்றது—ஸம்சார சம்பந்தமற்றவர்களே.

ஃ

எந்தேவன் தீயிலும், நீரிலும், செடிகளிலும், மரங்களிலும் எல்லா உலகங்களிலும், பிரவேசித்திருக்கின்ருனே, அத்தேவன் பொருட்டு நமஸ்காரம், நமஸ்காரம். கடவுள் ஸகலத்தையும் பார்க்கிருர். ஆனல், அவரைப் பூரணமாய்ப் பார்க்க முடியாது. யார் ஞானத்தையே வடிவாக உடையவரோ, யார் அணுவிலும் அதிஸூக்ஷ்மமானவரோ. யாரிடத்தில் உலகங்களும் உலகத்தவரும் நிலைப்படுத்தப்பட்டிருக்கின்றனரோ, அவரே சத்ய ஸ்வரூபி. அவரே அழிவற்றவர்; அவரே ஞானத்தினல் அறியப்படத்தக்கவர். நீ அவரை ஞானத்தினல் அறியக்கடவாய்.

ஃ

"நாஸ்திகவாதிக ளாவதற்குக் காரணங்கள்" (1) ஆஸ்திக மதங்களிலிருக்கும் பல பிரிவுகள். (2) ஆசாரியன் நடப்பதைப்போலவே பிரஜைகளும் நடவாமல், கடைசியில் ஆசார்யனும் ஜனங்கள் நடப்பதைப்போலவே நடக்கவேண்டி வருவது. (3) வைதிக விஷயங்களை அசிரத்தையோடும் பரிகாசம் செய்தல். (4) செழிப்போடும் அமைதியோடும் கூடிக் கல்வி பெருக்கும் காலம். (5) பூமி—வான தத்துவங்களை ஆராய்ந்து புத்திமயக்கம் கொள்ளுதலும், கேவலம் காமக்குரோத மோஹாதிகளில் மூழ்கியிருத்தலும் ஆக இந்த ஐந்து காரணங்களாலேயே நாஸ்திகம் வளருகின்றது. அற்பமான தத்துவ விசாரணை மனிதர் மனதை நாஸ்திகத்தை நோக்கும்படி செய்யினும், ஆழ்ந்த தத்துவ விசாரணை மனிதரின் மனத்தை ஆஸ்திகத்திற்கே கொண்டு வருகின்றது.

ஃ

"மனத்தின் பெருமை" கருதிய ஒரு பழம் இருக்கப்பட்ட இடத்தைக் காதால் கேட்டும், காலால் நடந்தும், கண்ணால் கண்டும், கையால் கொண்டும், மூக்கால் முகர்ந்தும், முன் வாய்ப் பற்களால் கடித்தும், அடிவாய்ப் பற்களால் மென்றும், நாவால் ருசி பார்த்து அறிந்தும்—ஆநந்தப்படுகிற மனதின் பெருமை என்னே!

ஃ

"கடவுள் கண்ணால் காணப்படாதவர்;" கருமேந்திரியங்களால் கவரப்படாதவர்; வியவஹரிக்கப்படக்கூடாதவர்; கருத்திலடங்காதவர்; சொல்லிமுடியாதவர்; ஸம்சார தருமத்தைக் கடந்தவர்; சாந்தமானவர்; மங்கள ஸ்வரூபி. ஒப்புயர்வான இரண்டுமற்றவர்.

ஃ

"வேதத்தின் மூன்று காண்டங்கள்" (1) கர்மகாண்டத்தில் இகபர ஸாதனமாகிய கர்மானுஷ்டானங்களைப் புரிவதின் முறைகளும், யாகம் முத

க்கிய மதஸ்தர்களுள் ஜாதிபேதமே கிடையாதாம்.

லிய விவரங்களும், அவற்றைச் செய்வதனுல் உண்டாகும் பலன்களும் அடங்கியுள்ளன. (2) உபாஸனு காண்டத்தில் பக்தி செய்யும் விதங்களும், அவற்றின் பலன்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. (3) ஞானகாண்டத்தில் பிரமஞானமடையும் மார்க்கங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. மந்திரம் என்றால் ஸ்தோத்திரங்கள். சூத்திரங்கள் என்றால் சுருக்கமானவைகள்.

ஃ

"லோகாயதமதம்" இவ்வுலக சுகமே சிறந்த சுகமென்றும், இவ்வுலகத்தைவிட்டு மேலுலகங்களிற் போய் அனுபவிக்கும் சுகம் சொற்பனம் போலென்றும், சுவாமி ஏது, பூமி ஏது என்றும், நரக சொர்க்கம் கிடையாதென்றும் சாதிப்பவர்களே லோகாயதராம்.

ஃ

"தியாஸபிமதம்" இவர்கள் ஜனஸமூக ஸகோதர வாஞ்சையை விருத்தி செய்ய விரும்புகிறார்களே யொழிய, பிரஸங்கத்தில்மட்டும் பிரமாத பேச்சுகளிருக்கிறதே தவிர, ஸ்வாமி பக்தியில் அவ்வளவு பற்றுள்ளவர்களாயிருப்பதாகத் தோற்றவில்லையென்று ஒரு பிரபல ஆசிரியர் கூறுகிறார்.

ஃ

ஸ்ரீ கிருஷ்ண சைதன்னிய ஸ்வாமிகள் :—இவர் எந்த ஜலத்தைக் கண்டபோதிலும் யமுனாநதியாகவும், எந்த வஸ்துவைக் கண்டபோதிலும் ஸ்ரீ கிருஷ்ணரைப்போலவும் பாவித்திருந்தபடியால், ஓர் பூர்ணசந்திரப் பிரகாஸமுள்ள ராத்திரியில் சில்கா ஏரிக்கரையின்மேல் பாடிக்கொண்டு போகையில், அந்த ஏரியின் ஜலம் சந்திரப்பிரகாசத்தினுல் யமுனாநதிபோல் தோன்றவும், அதில் பிரகாசிக்கும் சந்திர பிம்பத்தின் பிரதிபிம்பம் ஸ்ரீ கிருஷ்ணரைப்போல நடிக்கத் தோன்றவும், ஓடிப்போய்க் கட்டித்தாவ, அப்படியே விழுந்து பரமபதமடைந்து, மறுநாள் மீன் பிடிப்பவர் வலையிலகப்பட்டு, மேலே கொண்டுவர, உடனே எழுந்து ஹரி போலோ! ஹரி போலோ! என்று சொல்லிக்கொண்டே மறைந்துவிட்டாராம். இவருடைய சீடராகிய கிருஷ்ணதாஸர் சைதன்னியர் சரிதாமிர்தம் என்னும் பெயரால் வங்கபாஷையில் ஒரு சிறந்த கிரந்தமெழுதியிருக்கிறார்.

ஃ

யார் ஞானேந்திரியங்களுக்கு விஷயரோ, கர்மேந்திரியங்களுக் கதீதரோ, பிறப்பற்றவரோ, வருணமற்றவரோ கண் காதுகளில்லாதவரோ, அந்தக் கைகால்களற்றவரும், என்றுமுள்ளவரும், எங்குமுள்ளவரும், யாவற்றிலுமுள்ளவரும், அதிசூக்ஷ்மமான தன்மையுடையவரும், அழிவற்றவரும், எல்லாப் பொருள்களுக்கும் பிறப்பிடமுமானவரை விவேகிகள் எங்கும் பார்க்கின்றனர்.

ஃ

பிரம ஞானிகள் யாரைப் பணிகிறார்களோ, அவரே இந்த அழிவற்ற புருஷன். அவர் ஸ்தூலரன்று, குறுகினவரன்று, நீட்சியுடையவருமன்று,

அவர் வருணமுள்ள பொருளன்று; திரவியப் பொருளன்று, அவர் நிழலன்று; இருளன்று, காற்றன்று, ஆகாயமன்று. சுகதுக்கம் அற்றவர், கிராணேந்திரியமற்றவர், கண்ணற்றவர், காதற்றவர், வாக்கற்றவர், மிதமாகிய மனதற்றவர், முகமற்றவர்—அவருக்கு ஒப்புமில்லை.

ஃ

"அவர்" அசைகிறார்—அசையவில்லை. அவர் தூரத்திலிருக்கிறார்—அவர் சமீபத்திலுமிருக்கிறார். அவர் இந்த யாவற்றுக்கும் வெளியேயும் இருக்கிறார்.

ஃ

எந்தப் பூரண புருஷர் எல்லா உயிர்களும் உறங்கிக்கொண்டிருக்கையிலும் தாம் விழித்துக்கொண்டிருந்து அவைகளுக்கு வேண்டிய யாவற்றையும் படைத்துக்கொண்டிருக்கிறாரோ, அவரே சுத்தர், அவரே பிரஹ்மம். அவர் அழிவற்றவரென்று சொல்லப்படுகிறார்.

ஃ

வெளியில் ஆநந்த ஸ்வரூபனாகிய பரமாத்மா இராவிடில் யாருக்குச் சரீர அசைவு உண்டாகும்? யார் உயிர் வாழ்வார்? இவரே யவரவரது செய்கைக்குத் தக்க இன்பத்தைத் தருகிறார்.

ஃ

பரமாத்மாவே ஜீவாத்மாவுக்குச் சிறந்த பதவி; பரமாத்மாவே ஜீவாத்மாவுக்குச் சிறந்த தெய்வம்; பரமாத்மாவே ஜீவாத்மாவுக்குச் சிறந்த உலகம்; பரமாத்மாவே ஜீவாத்மாவுக்குச் சிறந்த ஆநந்தம்; இப்பேரானந்தத்தின் அம்சத்தையே வேறு வேறு உயிர்கள் அனுபவிக்கின்றன.

ஃ

எல்லாப் பிரபுக்களுக்கும் சிறந்த பிரபுவும், எல்லாத் தேவதைகளுக்கும் சிறந்த தேவதையும், எல்லாத் தலைவர்களுக்கும் சிறந்த தலைவனும், சிறந்த எல்லாவற்றிலும் சிறந்தவரும், தானாக விளங்குகிறவரும், உலகங்களுக்கு ஈசனும், துதிக்கப்படத் தக்கவருமானவரை ஹே மனமே! நீ திரிகரண சுத்தியுடனும் வணங்கக்கடவாய்.

ஃ

என்னுயிர்நீ யென்னுயிர்க்கோ ருயிரு நீயென்
னின்னுயிர்க்குத் துணைவநீ யென்னை யீன்ற
வன்னைநீ யென்னுடையவப்ப நீயென்
னரும்பொருணீ யென்னிதயத் தன்பு நீயென்
னன்னெறிநீ யெனக்குரிய வுறவு நீ யென்
னற்குருநீ யெனைக்கலந்த நட்பு நீயென்
றன்னுடைய வாழ்வுநீ யென்னைக் காக்குந்
தலைவனீ குணம்யாவுந் தழைத்த தேவே!

---

வழக்கத்திற்கு சக்தி அதிகம். வழக்கம் உண்மையையும் விழுங்கிவிடும்.

அமிர்தகுணபோதினி

ஆங்கீரஸ ஹு பங்குனி மீ 1உ

# தந்தையிடத்துக் கொண்ட அன்பு.

ஆயிரம் போர்வீரர் ஒருவர்க்கொருவர் பேசாதவாறு மௌனமாய்ப் புறப்பட்டு ஓர்நாட் காலையில் ராஜபுதனத்திலுள்ள 'தீர்' நகரத்தின் தெற்கு வாயிலைக் கடந்து சென்றுகொண்டிருந்தார்கள். அவர்கள் முகத்தில் விசாரக் குறிகள் விளங்கின. சேனாதிபதியும் துக்கமேலிட்டதால் தலை குனிந்து போய்க்கொண்டிருந்தான். அவன் ஊரைவிட்டு உயிருள்ள நாளும் விலகியிருக்கவேண்டுமென்பது அவன் தந்தை செய்த தீர்மானம். தந்தையின் மூத்தமகனாய்ப் பிறந்ததே அவன் செய்த பிழையாகும்.

ஃ

'தீர்' மகாராஜனுக்கு மனைவியரிருவர் உளர். இம்மத்சிங்கு மூத்தமனைவியின் குமாரன். இளைய மனைவி 'குஜாபாய்'க்கு ஓர் பிள்ளையுண்டு. மகாராஜன் இளையவளிடம் அன்புடையவனாதலின், அவள் இப்போது இளவரசுபட்டம் தன் மைந்தனுக்கே தரவேண்டுமென்று சொல்ல, இராஜனும் உடன்பட்டான். ஆகவே, பதினான்கு வயதுள்ள இளையாளின் மகன் தன் தந்தைக்குப்பின் தனக்கே பட்டம் கிடைக்குமென்று சந்தோஷித்து வரவும், மூத்த மனைவியின் புதல்வனான இம்மத்சிங்கு தேசாந்தரம்போய்ப் புது ஜீவனோபாயம் தேடவுமாயிற்று.

ஃ

இம்மத்சிங்கோ சண்டையில் பின்வாங்காச் சூரன்; மற்போரிலும், குத்துச்சண்டையிலும் தீரன்; வேற்றரசர்மீது பன்முறை படையெடுத்து வெற்றியும் புகழும் பெற்ற வீரன்; உறவினராலும், ஊராராலும் கொண்டாடப்பட்ட உத்தமன்; அவன் அன்பின் வடிவம்; அருளுக்கிருப்பிடம்; தந்தை அவனிடம் அன்புடையானேனும், இளையாள் மோகத்தால் அவனை வெறுத்து ஊரைவிட்டு ஓட்ட நேர்ந்

---

(ஆலயங்களின்) புனிதத்தன்மை குறைவதும், உயர்வதும் யாவும் மன உணர்ச்சியைப் பொறுத்திருக்கின்றன.—மகாத்மா.

தது. அவன் தந்தையின் கட்டளையைத் தாங்கி ஊரைவிட்டுப் போன போது, அவனை என்றும் இணைபிரிந்தறியாத அவனுடைய ஆயிரம் காலாட்களும் அவன்பின் தொடர்ந்தார்கள்.

ஃ

அவர்கள் துக்க மிகுதியால் ஒருவருக்கொருவர் பேசாது சென்றார்களென்று மேலே சொன்னோம். அவர்களிற் பலர் வாலிபராதலால், அவர்களுடைய துக்கம் நெடுநேரம் நிற்கவில்லை. அவர்கள் போகப்போக, வெளிநாட்டில் பகைவரை யெதிர்த்து அவர்களாலடையும் வெற்றியையும், புகழையும் எண்ணி இன்புறலாயினர். வயது சென்றவர்கள்மட்டும் தாங்கள் பிறந்து வளர்ந்து பெரியவர்களான ஊரை இனி பார்க்கப்போவதில்லையே என்று ஏங்கினார்கள். இம்மத்சிங்குக்கோ அன்புள்ள அன்னையையும், அழகின் மிக்க மனைவியையும் பிரிய மனம் வரவில்லை. ஆயினும் என் செய்வது?

ஃ

அவர்கள் அன்று நெடுந்தூரம் நடந்து, ஓர் காட்டில் ஒரு அருவியின் அருகிலிறங்கித் தங்களுக்கு வேண்டிய ஆகாரங்களைச் சமைத்துச் சாப்பிட்டார்கள். அப்பால் அவர்கள் என்ன செய்வதென்பதை எண்ணுகையில், சிலர் திரும்பிச்சென்று 'தீர்' நகரத்தைத் தாக்குவோம்; நம்மைத் தேசாந்தரம் துரத்தியவரின் சூரத்தைக் காண்போம்" என்றுரைத்தனர். இம்மத்சிங்கு, "என் நண்பர்களே! நாம் பிறந்து வளர்ந்த நகரை—நம் பெற்றோரும் உற்றோரும் இருக்கும் இடத்தை—'தீர்' என்னும் நமது அருமைத்தாயை—நாமே எதிர்த்து நாசஞ்செய்வது நன்றோ? நமது நெருங்கிய உறவினரையும், வேண்டிய நண்பர்களையும் அமர்செய்து கொன்று அழியாப்பழி தேடுவது அழகோ? சண்டை செய்யவேண்டுமாயின் நமக்குப் பெரும் சத்துருக்களாயுள்ளவர்கள்மீது செல்லலாமே" என்றான்.

ஃ

இச்சொற்கள் அவர்களுடைய செவியிற்படவே, அவர்களின் உள்ளத்தில் ஓர்வித ஊக்கமும், உற்சாகமும் உண்டாயிற்று. அவர்கள் மீசையை முறுக்கித் தோள்களைத் தட்டித் தம் தலைவன் தம்மை எங்கு போகக்கூறினும் சம்மதமே என்றனர். பிறகு மூன்று நாள் பயணத்திலுள்ள 'பார்' என்னும் கோட்டை மீது செல்வதாகத் தீர்மானமாயிற்று. அத்தேசத்தரசன் கூர்சரத்தில் சண்டை செய்து கொண்டிருந்ததால் அவர்களுக்குப் பார் என்னும் கோட்டை எளி

பொய்கள் என்பவை வர்த்தகமென்றும், அரசென்றும், தேசபக்தியென்றும் வேறு பெயர் புனைந்து செருக்குடன் உலாவுகின்றன.

தில் வசமாகுமென்னும் எண்ணம் பிறந்தது. உடனே இராப்பகலாய் நடந்து மூன்றாம்நாட் காலையில் வானத்தையளாவிய ஓர் மலையையும், அம்மலையின்மீது அழகாய்க் கட்டியுள்ள கோட்டையையும் கண்டு அதிசயித்து அருகிற் சென்றார்கள். வழியில் எதிரிகள் எவரும் அவர்கள் கண்களுக்கு எதிர்படாதது அவர்களுடைய அதிர்ஷ்டந் தான். கோட்டையைச் சமீபித்தபோதும் அவர்களுக்கு நற்காலமே. கோட்டைக் காவலாளிகளிற் பலர் அன்று வேட்டையாட வெளியிற் சென்றிருந்தார்கள். இம்மத்சிங்கு தன் வீரரை ஓர்புறம் ஒளித்து, வெளியிற்போயிருந்த காவலாளரின் வரவுக்குக் காத்திருந்தான்.

ஃ

பொழுது போயிற்று. காவலாளர் வந்தார்கள். கோட்டைக் கதவு திறக்கப்பட்டது. இம்மத்சிங்கு அதுதான் ஏற்ற சமயமென்று ஒளித்திருந்த தன் சேனைக்கு உத்தரவுதரவே, அவர்கள் காவலாளர் மீது கடும்புலிபோற் பாய்ந்து சின்னபின்னம் செய்தனர். சிலர் மடிந் தனர்; சிலர் காயம்பட்டனர்; சிலர் குற்றுயிராயினர்; சிலர் தப்பி யோடினர்; கோட்டைக்குள்ளிருந்தோர் தங்களுக்கு நேர்ந்த விபத்தை யெண்ணிக் கோட்டைக்கதவைச் சாற்றினர். இம்மத்சிங் குக்கு இவ்வாறு நடக்குமென்பது முன்பே தெரியும். அவன் உடனே தன் ஆட்களிலிருவரைக் கோட்டைப் பின்புறம்போய் மதி லேறி உட்புக உத்தரவு செய்தான். உள்ளேயிருந்தோ ரனைவரும் பின்பக்கம் நடப்பது யாதென்று அறியார்கள். பின் சென்றோர் சந்தடி செய்யாது சுவர் ஏறிக்குதித்துக் கோட்டைக் கதவைத் திறந்துவிடவே, இம்மத்சிங்கும் அவன் சேனையும் எளிதில் உட்புகுந்து கோட்டையைத் தங்களுக்குரியதாக்கினர்.

II

பார் என்னும் கோட்டை பரந்துயர்ந்து பனி மலையின்மீது பால்போலும் விளங்கியது. எத்திசையிலிருந்தும் எதிரிகள் நெருங்கா வண்ணம் மலையைச்சுற்றி மதிலரண் உண்டு. அங்கங்கே கொத்தளங் களும், கோபுரங்களுமுண்டு. களஞ்சியங்களில் ஏராளமாக தானியங் களும், ஆயுதசாலையில் அளவற்ற ஆயுதங்களுமிருந்தன. ரஜபுத்தி ரர்க்கு எவ்வித குறையும் இல்லை. அவர்கள் வெளியிற் சென்று வேட்டையாடியும், அண்டை அயலூர்களிலிருந்து வேண்டியன கொணர்ந்தும் சுகமாகத் தங்கள் காலத்தைக் கழித்தார்கள். ஆனால், மனிதர்க்கு சுகம் என்பது நீடித்ததன்றே. கொஞ்சநாளையில் வெளியி

---

சாதாரண மனித முயற்சியால் கொடிய காரியங்களைத் தடுக்க முடியாது போனால், தபஸ்மூலம் அவற்றைத் தடுக்கவழி தேடவேண்டும் என்பது ஹிந்துமதக்கொள்கை. அதீதமான தபஸ் முறையையே உபவாசமென்பது.
—மகாத்மா.

லிருந்து ஒரு பெரிய சேனைவந்து இவர்களை எதிர்த்தது. பல தினங்கள்வரை அதனோடு போர்புரிந்து முடிவில் வெற்றியுடன் கோட்டையைத் தம் வசமாக்கினர். எனினும், கோட்டைக்குள் நெடுநாள் இருப்பதற்கில்லை. யுத்தத்தால் அடைந்த கஷ்டங்கள் ஒருபுறமாக, இதனோடு இம்மத்சிங்கின் தந்தை ஆபத்திலிருக்கிறாரென்றும், உடனே வந்தாலொழிய அவரைக் காண்பது கூடாதென்றும் அவன் மனைவியிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. இக்காரணங்களால் அவன் கோட்டையைவிட்டு விலகவேண்டியதாயிற்று.

ஃ

இம்மத்சிங்கு கோட்டையைக் கடந்து வெளியேபோக எத்தனித்த நேரமோ, இடியும் மின்னலும் கூடிய இராவேளை. அச்சமயம் எதிர்த்தவரைத் துரத்தியோட்டி அந்நகரைக்கடந்து வடபால் நோக்கி விரைந்து சென்றார்கள். இவ்விதம் பிரயாணம் செய்து தங்களின் சுதேசத்தைக் கண்டபோது அவர்கள் அடைந்த ஆநந்தத்தை யாரே சொல்லவல்லார்? சிலர் கீழேவிழுந்து தங்களின ஜென்மபூமியைச் சேவித்தார்கள். சிலர் மண்டியிட்டுக் கடவுளைத் துதிசெய்தார்கள். சிலர் குதித்தார்கள். சிலர் கூத்தாடினார்கள். ஆதியில் தங்கள் தேசத்தைவிட்டுப் போனபோது இனித் திரும்பவும் காணப் போவதில்லை எனச் சிந்தை நொந்த இவர்கள் இவ்வாறு சந்தோஷித்தது இயல்புதானே. ஃ

அச்சமயத்தில் தெற்குமுகமாக ஒரு குதிரைவீரன் வந்து கூட்டத்தில் நுழைந்து இம்மத்சிங்கைக் கண்டு களிகூர்ந்து மடியிலிருந்த ஏதோ ஒன்றை எடுத்துக்கொடுத்தான். அது இம்மத்சிங்கின் அருமை மனைவியும் அருயிர்க் காதலியுமாகிய அகலியாபாய் அனுப்பிய கடிதமாகும். பிரித்துப் பார்க்க அதில்,

"எனதன்புள்ள நாயகரே,

இக்கடிதம் கண்டவுடன் புறப்பட்டு வாரும். என்ன வேலையிருப்பினும் தவறவேண்டாம். தங்கள் தந்தையார் குஜாபாயுடனும், அந்த அம்மையின் குமாரன் பப்பாலாலுடனும் வசந்தமண்டபம் செல்கின்றார். அவர் உயிர்பிழைப்ப தருமை."

என்றிருந்தது. இம்மத்சிங்கின் மனம் திடுக்கிட்டது. கடிதத்தை இரண்டாமுறை படித்தான். படித்துக் கையைக் கன்னத்தி லூன்றி யோசித்தான். கடிதத்தின் விவரம் தெரியவில்லை. மற்றும்

---

பெண் கபடமற்றுப் பேசக்கூடும். ஆனால், அப்பெண்ணிடம் பேசும் ஆடவனே அவளை—அவளது அரிய கற்பை விழுங்கிவிட எந்த நிமிஷத்தில் தருணம் வாய்க்குமோவென எதிர்பார்க்கிறான்.

ஒருமுறை வாசித்து வானத்தை நோக்கினன். பின்னும் ஒருமுறை படித்துப் பெருமூச்சுவிட்டான். கடிதத்தில் குஜாபாயின்பேர் இருந்தமையால் அவள் ஏதோ சூது செய்திருக்கவேண்டுமென்று துணிந்தான். தன் தந்தை அவள் மோகவலேயிற் சிக்கித் தவிப்பதை அவன் அறிவான். அய்யோ! அவள் அடிநாக்கில் நஞ்சும், வெளி நாக்கில் அமுதமுமுடைய படுநீலியாயிற்றே! இதுவரையில் தன் அருமைத் தந்தையாரின் கதி யாதாயிற்ரோ என்று கண்ணீர் சொரிந்தான்.

III

இன்று பங்குனிமாத ஆரம்பம். பொழுது போகும் வேளை. செடி கொடிகள் தளிர் நிறைந்து தையலார்போலும் திகழ, தரையானது புல் அடர்ந்து பச்சைக் கம்பளம் விரித்தாற்போலும் இருந்தது. ஏரியின் நடுவில் வசந்த மண்டபமோ ஏழு நிலேகளுடன் அழகாய் விளங்கிற்று. சுற்றி மல்லிகை, முல்லே, ரோஜா முதலிய பல்வகைச் செடிகளும், ஏரியில் தாமரை, அல்லி முதலிய அளவற்ற கொடிகளும் நிரம்பப்பெற்றிருந்தன. நீர்ப்பறவைகள் சிறகையுலர்த்தித் தத்தம் கூடுதேடி விரைந்து சென்றன. பல சாதி மீன்கள் நீரில் பொன்னேப்போலும், வெள்ளியைப்போலும் துலங்கித்துள்ளி விளேயாடின. இளங்காற்று இனிது வீச, எங்கும் நறுமணம் கமழ்ந்தது.

ஃ

தந்தையார் தன்னே ஊரினின்றும் துரத்தியதால் தன்னேக் கண்டு கோபிப்பாரென்றஞ்சி, இம்மத்சிங்கு மறைந்து சென்றான். இருள் சூழ்ந்ததால் அவனே ஒருவரும் காணவில்லே. அவன் மாளிகையின் பின்புறம்போய் ஓர் பலகணி வழியாக உள்ளே பார்த்தான். உள்ளே விளக்கு எரிந்துகொண்டிருந்தது. அவ்விளக்கின் வெளிச்சத்தாலும், சலவைக் கற்களின் ஒளியாலும் எங்கும் பால்போலத் திகழ்ந்தது. கூடத்தின் நடுவில் தங்கக் கிண்ணங்களில் நானுவித கறிகளிருந்தன. பொன் இலேயில் முல்லே மலரைப்போலும் வெண்மையான அன்னம் பரிமாறியிருந்தது. அதன் எதிரில் வெள்ளிப் பீடத்தில் வீற்றிருந்த வேந்தனே, முகத்தில் சிறுநகை விளங்க, அருகிலிருந்த தன் ஆசை நாயகியை உற்றுப் பார்ப்பதும், பரிகசிப்பதும், சிரிப்பதுமாயிருந்தார். இளேயகுமாரன் பப்பாலால் பக்கத்தில் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். குஜாபாய் மயில் விசிறியால் தன் நாயகனுக்கு விசிறிக்கொண்டிருந்தாள். அவள் உயர்ந்த ஆடையணியால் தன்னே அலங்கரித்துக்கொண்டு, தன் அருகிலிருந்த விளக்கி

---

ஒரு பெண்ணால் வீடுமுழுதும் பிரகாசிக்கிறதென்பதை நேரில் அறிய விரும்பினல், அந்தப் பெண் தன் குழந்தைகளோடும் கோயிலுக்கோ வேறிடத்திற்கோ போய்விடும்போது வீடு காலியாக இருக்கும் வெற்றுநிலேயைக்கொண்டு உணர்ந்திடலாம்.

ஊம் பிரகாஸமாக விளங்கினாள். முழுமதிபோன்ற அவள் முகத்தை யும், உருண்டு திரண்ட அவயவங்களையும், பசுந்தளிர்போன்ற மேனி யையும், கருண்டு படிந்த நெற்றி மயிரையும் பார்த்த யாவர்தாம் மோகியார்? அன்று அவள் வானவில் வண்ணச்சேலையுடுத்து, செம் பட்டுக் கச்சணிந்து, அமாவாசைநாள் தோனுரித்துத் தோன்றும் அரவுபோல அழகாயிருக்கிற அவள்மீது தன் அருமைத் தந்தையார் ஆசைகொண்டு அறிவை இழந்தது ஆச்சரியமல்லவென் றெண்ணி னன்.

ஃ

அப்பால் அவள் எழுந்து, தன் நாயகனுக்கு ஓர் முத்தம் தந்து, தன் கையால் ஷர்பத்செய்து வருவதாய்ச் சொல்லி அடுத்த அறைக்குள் நுழைந்தாள். அவள் பேச்சிலும் நடையிலும் ஏதோ சூதிருக்கலாமென்று எவரும் அறியலாகுமெனினும், இளையாள் மோகங்கொண்ட இராஜனே கவனித்திலன். பப்பாலால் தன் அன்னை சென்ற வழியே அடிக்கடி திரும்பிப் பார்த்ததால், இம்மத்சிங்குக்கு ஐயப்பாடதிகரித்தது. அவள் ஓர் பொற்கிண்ணத்தில் உடையில் ஒளித்துவைத்திருந்த ஏதோ ஒன்றை யெடுத்துப்போட்டு புருஷ னிடம் கொண்டுவந்தாள். இம்மத்சிங்குக்கு ஒரு நொடியில் உண்மை புலப்பட்டது. உடனே அவன் மாளிகையில் நுழைந்து அவர்களின் எதிரில் நின்றான்.

ஃ

தந்தைக்கோ அவனைக் கண்டதும் அடக்கமுடியாத கோபம் எழுந்து வெளியிலிருந்த காவலாளரை யழைத்தார். அவர்கள் ஓடி வரவும், உள்ளே துணிந்துவந்தவனைப் பிடித்துக் கட்டும்படி கட்டளை யிட்டார். திரும்பவும் அவர், "அடா, முழுமூடா! துன்மார்க்கா! தந்தைசொற் கடந்த சண்டாளா! உன்னை நான் ஊரைவிட்டுத் துரத்தியிருந்தும், என் உத்தரவின்றித் திரும்பிவந்ததன்றி, யானும் என் காதலியும் தனித்திருக்கும் சமயத்தில அச்சமின்றி அறைக்குள் புகுந்தாய். உன்னைப்போன்ற நன்றிகெட்டவனும், பழிக்கஞ்சாதவ னும், பரமசண்டாளனும் ஒருவருமில்லை" என்றார்.

ஃ

இம்மத்சிங்கோ முகம் சோர, கண்களில் நீர்வடிய, இரக்கக்குர லுடன் "அன்புள்ள தந்தாய்! என்மீது கோபிக்காது நான் சொல் வதை ஆற அமரக் கேளுங்கள். நான் தங்களுடைய மூத்தகுமாரனை தால் பட்டம்பெற உரிமையிருந்தும், தங்களின் கட்டளைப்படி ஊரைவிட்டுப் போனேன். இன்று தங்கள் உத்தரவின்றி இங்கு வந் தது தங்களுக்கு அரியவோர் ஆபத்து நேர்ந்ததென்றறிந்து அதனை

---

எவர் மீது மனஸ்தாப மிருக்கிறதோ அதை அதிகமாய்க் காட்டுவதற்கு அவர் வீட்டுக்குப் போகாமல் அடுத்த வீட்டிற்குப்போய்ப் பேசிவிட்டு அவ் வளவுடன் திரும்பிவிட்டால்—அது அதிக வேகத்துடன் வேலை செய்யும்.

நீக்கும் பொருட்டாகும். நான் செய்நன்றி கெட்ட நீயன் அல்லேன்; துரோகம் என்பதைச் சொற்பனத்திலும் அறியேன்" என்றான்.

ஃ

தந்தை:—பயலே, இம்மத்சிங்கு, உன்னைப்பெற்ற தந்தைக்கோ பஞ்சாங்கம் படிக்கின்றாய்? உன் கள்ளச் செய்கையை இங்கு காட்டாதே.

இம்மத்சிங்கு:—இளையாள் மோகத்தால் நன்றென்றும் தீதென்றும் அறியாத தங்களுக்கு என்செய்கை கள்ளமாகவே காட்டும். குமாரனிடம் மனம் மாறியபோது குணமும் மாறுந்தானே.

தந்தை:—உன்னைப்பெற்று வளர்த்த என்னைத் தூஷிப்பது மன்றி, என் கண்ணினுண்மணியும் காதற்களஞ்சியமுமாகிய குஜாபாயின்மேலும் தோஷம் நினைக்கின்றாய். துரோகி, என்முன் நிற்காதே, ஓடிப்போ.

இம்மத்சிங்கு:—குஜாபாய் கொண்டுவந்த பானத்தை பப்பாலைப் பருகச் சொல்லுங்கள். துரோகி யார் என்பது விளங்கும்.

ஃ

குஜாபாயின் சிவந்தமுகம் வெளுத்தது. உள்ளம் பதறி உடல் நடுங்கிற்று. அவள் நிலைதவறிக் கீழே விழுந்தாள் 'தீர்' மகாராஜன் அவளைத் தாவியணைத்துத் தூக்கி யுட்காருவித்து, மகனைப்பார்த்துப் பல்லைக்கடித்து, புருவத்தை நெறித்து, "சண்டாளா, என் அரிய மனைவியைக் குறை கூறியதுமன்றிக் கொல்லவுமா வந்தாய்" என்றுரைத்து, ஓடி அவனைத் தாக்கினர். இம்மத்சிங்கு இன்னும் தன் தந்தை உண்மையை யறியவில்லையென்றோர்ந்து, தானே அங்கிருந்த கிண்ணத்தைக் கவிழ்க்க, அதனடியில் விஷமிருந்தது வெளியாயிற்று. உண்மையறியாது மனங்கொதித்து மகனைப் பலவாறு திட்டிய தந்தையின் நிலைமையை நாம் ஒருவாறு உணரலாம். இவ்வாபத்தினின்றும் தப்பித்துக்கொண்டதைக் கண்டு அவருக்கு ஆச்சரியமும், ஆநந்தமும் உண்டாயிற்று. உடனே தம் மனையாளிடமிருந்த ஆசை தொலைந்தது. அருவருப்பு குடிகொண்டது. தம் அடாத மகன் அருமை மகன் எனக் கண்டதும், அவனுக்குச் சூழ்ந்த கொடுமையையும், கூறிய நிந்தையையும் எண்ணி வருந்தினர். உள்ளம் பதைத்தார். தழுவி முத்தந் தந்தார்.

ஃ

அப்பால் தம் மனைவியை நோக்கி, "அடி கள்ளி! காதகி! என்னுடன் நயவார்த்தைகளாடி மயக்கிய நாரி! என்னை நஞ்சிட்டுக் கொல்லவந்த நாசகாலி! உதட்டில் அமிர்தமும், உள் நாக்கில் விஷ-

---

* இந்த இம்மத்சிங்குவின் கதை கட்டுக்கதையன்று. சரித்திரார்ஹமானது.

றுங்கொண்ட துரோகி! உன் மோகக் கடலில் என்னை மூழ்கவைத்து, என் அறிவை மயக்கி, உணர்ச்சியைப் போக்கி, என் அருமைச் செல்வனை ஊரைவிட்டோட்டிய பாவி" என்று வாய்க்கு வந்தவாறு வழங்கி, அவளையும் அவள் மகன் பஞ்சாலனையும் சிறைவைத்தார். பின்னர் தம் மைந்தனை மற்றொருமுறை கட்டிக்கொண்டு, "என் அருமை மகனே! அருமைப் புதல்வனே! வேற்றரசர் படையெடுத்தபோதெல்லாம் அவர்களை எதிர்த்து வெற்றியும் புகழும் தந்த வீரனே! ஆட்டுத் தோலைப்போர்த்த புலிபோன்ற இவ்வரக்கியின் அம்பலால் ஊரைவிட்டுத் துரத்திய இவ்விரும்பினை மனத்தினனுக்கும், கன்மனக் காதகனுக்கும் உற்ற சமயத்தில் ஓடிவந்து உயிரளிக்க உதவினனே! உன்னை நான் எவ்வாறு புகழ்வேன் எங்ஙனம் துதிப்பேன்?" என்று சொல்லிப் பலகால் முத்தமிட்டுப் பூரித்தார். [15]

ஃ

இம்மத்சிங்கும் அவன் தந்தையாரும் மாளிகையைவிட்டு ஊருக்குப் புறப்பட்டார்கள். மகாராசன் பரிவாரங்களும், இம்மத்சிங்கின் காலாட்படைகளும் பின் தொடர்ந்தனர். அன்பு எனும் கடலிற் குளித்து, வெற்றி எனும் ஆடையணிந்து, கீர்த்தியென்னும் மலரைச்சூடி இம்மத்சிங்கு ஊருக்குள் நுழைந்தபோது அவனுக்கு உண்டாகிய ஆநந்தத்தை யார் சொல்லக்கூடும்? அவனைக் கண்டு ஊராரும் உறவினரும் அடைந்த சந்தோஷத்தை எவர் சொல்ல இயலும்?

ஃ

அன்று வீதிதோறும் பந்தல்கள் இட்டுத் தோரணங்கள் தொங்கின. ஊரெங்கும் வாத்தியங்களும், பாண வேடிக்கைகளும், பாட்டுகளும், சங்கீதங்களுமாயிருந்தன. ஊரிலுள்ள ஒவ்வொருவரும் தூரதேசம் சென்ற தமது புத்திரன் திரும்பி வந்தாற்போலும் மகிழ்ச்சிகொண்டார்கள். இவர்கள் மகிழ்ச்சியிலும் எண்மடங்கு மகிழ்ந்தவள் இம்மத்சிங்கின் அழகிய மனைவி அகல்யாபாயாகும். தான் அந்தரங்கமாய்க் குஜாபாயிடம் வைத்த ஆட்கள் மூலம் அவள் செய்யப்போகும் சர்வ நாசத்தை முன்னறிந்து தன் காதலனுக்குக் கடிதம் விடுத்துத் தெரிவித்துத் தன் மாமனாரான அரசரின் உயிரைக் காத்தமை போற்றற்பாலதன்றோ? இம்மத்சிங்கு தன் ஆருயிர்க்காதலியைக் கட்டியணைத்து உள்ளமுவந்தான். திரும்பிவந்த தனயனைத் தாயும் தழுவிக்கொண்டு ஆநந்திதையானாள். நன்மனத்தினர் என்றும் நன்மையையே பெறுவர்.

போல்லாதவர் நன்மை போருந்துவதும்
நல்லார்மிக வன்றுயர் நண்ணுவதும்
தோல்லார் வினையால்வரினுந் தோடர்பாய்
நில்லாதேனும் வாய்மோழி நிச்சயமே.

---

# எட்டாம் வருட சந்தா.

மணியாடரிலேயே அனுப்புங்கள்.

அன்பர்காள்!

இந்தப் பங்குனி ஸஞ்சிகையுடன் நமது "அமிர்தகுணபோதினி"க்கு எழுவருடங்கள் பூர்த்தியாகின்றன. இந்த எழு வருட வால்யங்களையும் ஒன்று சேர்த்துப் பார்த்தால், நமது "அமிர்தகுணபோதினி"யின் அருமையும், அதன் ஆசிரியருடைய உழைப்பின் பெருமையும் நன்கு விளங்கும். சென்ற ஸஞ்சிகையில் 'அமிர்தகுணபோதினி'யின் உயர்வைக் குறித்துத் தெளி வாய்த் தெரிவித்திருக்கின்றோம். இனி பிறக்கப்போகும் எட்டாவது வருட முதற்கொண்டு இதுவரையில் நடந்ததைவிட அதிமேன்மையாக நடத்துவ தற்கு நம்மால் இயன்றவரையில் முயற்சிசெய்வோம். நமது அன்பிற்கினிய சந்தாதார்கள் எட்டாம் வருடத்தின் புதிய சந்தாவை இப்பத்திரிகையைப் பெற்ற தினமே மணியாடர் மூலம் அனுப்பிவைக்குமாறு வேண்டுகிறோம். மணியாடர் செய்தால் நான்கு அணு லாபமாவதுடன், அது "அமிர்தகுண போதினி"க்குச் செய்த பெரும் உதவியாகவும் இருக்கும். மணியார்டர் மூல மாக அனுப்புகிற நேயர்கள் ஏப்பிரல் மாதம் 10-ம் தேதிக்குள்ளாக நமக்கு அனுப்பிவிடுமாறு கேட்டுக்கொள்ளுகிறோம். மேற்குறித்த தேதிவரையிலும் மணியாடர் செய்யாதவர்களுக்கு மட்டும் எட்டாவது வருடப் புது சந்தா வுக்கு சித்திரைமாத ஸஞ்சிகையை சந்தா ரூபாய் ஒன்று, வி. பி. செல வுகள் அணு ஆறு ஆக ரூபாய் 1—6—0-க்கு வி. பி. யில் அனுப்பிவைக் கின்றோம். மணியாடர் அனுப்ப சௌகரியப்படாத கனவான்கள் ஒரு வருஷ சந்தாவாகிய மேற்கண்ட தொகையை வி. பி. பாக்கெட்டு கிடைத்த க்ஷணம் தாமதமின்றிச் செலுத்திப் பெற்றுக்கொள்ளும்படி கோருகிறோம்.

ஃ

சந்தாதார்களின் நன்முயற்சியால்தான் இப்பத்திரிகை செழிக்க வேண்டுமாதலின், ஒவ்வொருவரும் இதன் க்ஷேமத்தைக் கோரி, தாங்கள் புது வருட சந்தா செலுத்துவதுடன், இயன்றமட்டில் புதிய சந்தாக்களையும் சேர்த்தனுப்பினால் பத்திரிகையின் பக்கங்களை அதிகப்படுத்துவதற்கு உதவி யாக இருக்கும். புது வருட சந்தாவை உடனே மணியாடர் செய்யவேண்டு மென்று சென்ற பத்திரிகையில் தெரிவித்திருப்பதுடன் இந்தப் பத்திரிகை யின் மூலமாகவும் இரண்டாம் முறையாகக் கேட்டுக்கொள்கிறோம்.

ஃ

இவ்விதம் இருமுறை கேட்டுக்கொண்டதற்கும் காரணமிருக்கிறது பகவந்நாமாவை ஒருமுறையல்ல, பன்முறையும் சொல்லிக்கொண்டேயிரு தாலன்றி அவருடைய அருட் பிரஸாதத்தை அடையமுடியுமா? அதுபோல். எத்தனையோ லௌகிக வைதிக கர்மாக்களைச் செய்துகொண்டிருக்கும் கன வான்களுக்கு நமது "அமிர்தகுணபோதினி"ப் பத்திரிகையின் அபிவிருத் தியை நாடி உடனே புதுவருட சந்தா அனுப்புவதைக் கவனிக்கும்படி

இரண்டாமுறையும் தூண்டுவது அவசியமாயிருக்கிறது. "மூர்த்தி சிறிதாயினும் கீர்த்தி பெரிது" என்னும் பழமொழிப்படி. சந்தா நேயர்கள் செலுத்தும் தொகை அவர்கட்கு ஒரே ரூபாயாகிய சொற்பத் தொகையேயாயினும், வருஷமொன்றுக்கு இவ்வற்பத் தொகையை முன்பணமாகச் செலுத்துவது ஒரு பாரமல்லவாயினும், அந்தத் தொகையானது அக்கனவான்களின் பத்திரிகாபிமானத்தைப் பிரகாசப்படுத்துகிறது. அந்தத் தொகையானது "அமிர்த குணபோதினி"ப் பத்திரிகையை சாஸ்வதமாய் நிலைக்கவைத்துத் தொடர்ந்து நடத்தப் புது சக்தி தருகின்றது. அந்த ஒரு ரூபாயான சிறுதொகை உயர்ந்த கஸ்தூரி, புனுகு, ஜவ்வாது முதலியவற்றைப்போல் ஸுவாஸனை வீசி இப்பத்திரிகைக்குப் பெருமையை உண்டாக்குகிறது. ஆதலின், அன்பர்காள்! பத்திரிகாபிமானிகாள்! இப்பத்திரிகைக்கு நீங்கள் செலுத்தவேண்டிய முன்பணத்தை ஆக்ஷேபமும் ஆலஸ்யமுமின்றி மணியாடர் மூலமாகவேனும், வி. பி. பாக்கெட்டு கிடைத்த க்ஷணமேனும் செலுத்தி, "அமிர்தகுணபோதினி"யை ஆதரிப்பீராய்; "அமிர்தினி"யின் பத்திராசிரியரது வேண்டுதலைக் கோரா [illegible]; அவருடைய கோரிக்கையை ஈடேற்றினீர் என்ற திருப்தியை யடைந்து, ஸதா ஸந்தோஷசித்தர்களாயிருக்குமாறு ஸர்வேசுவரனைப் பிரார்த்திக்கின்றோம்.

ஃ

முக்கிய குறிப்பு:—ஏப்பிரல் மாதம் 10-ம் தேதிக்குள் புதுவருட சந்தாவான ஒரு ரூபாயை மணியாடர் மூலமாக அனுப்பிவிடும் நேயர்கட்கு சித்திரை மாதப் பத்திரிகை வழக்கம்போல் முதல் தேதியிலேயே அனுப்பவிடப்படும். மணியாடர் செய்ய சௌகரியமில்லாத கனவான்களுக்கு சித்திரைமாதப் பத்திரிகையை வி. பி. மூலம் அனுப்புகிறோமாதலின், அப்பத்திரிகை அவர்களுக்குத் தாமதித்தே கிடைக்கும். அதாவது: அவர்கள் வி. பி. யைப் பெற்ற பிறகே சித்திரைமாதப் பத்திரிகையைப் படிக்கும்படியிருக்கும். இந்த அசௌகரியம் வி. பி. யில் அனுப்புவதால் ஏற்படுவதுடன், நான்கு அணா அதிகமாகவும் தபாலாபீஸுக்குக் கொடுக்கவேண்டி வருகிறது. ஆதலின், மணியாடர் மூலமாகவே புதுவருட சந்தாவை யனுப்பிவைப்பது ஸர்வோத்தமமா யிருக்குமென்று மற்றொரு முறையும் தெரிவிக்கலானோம்.

ஃ

வெளிநாட்டுச் சந்தாதார்கள் இந்தப் பங்குனிமாதப் பத்திரிகையைப் பெற்றதும் தங்களின் ஒரு வருஷ சந்தாவாகிய ரூபாய் 2—0—0 ஐயும் உடனே அனுப்ப வேண்டுகிறோம். அவர்களின் சந்தா நமக்குக் கிடைத்த பிறகுதான் சித்திரை மாத ஸஞ்சிகையை அனுப்புவோம்.

பாவலரும் நாவலரும் பண்பாகப் போற்றிமிக
காவலது செய்யக் களிப்பாக—நீவளர்க்கும்
புத்ரி அமிர்தகுண போதினியாள் மற்றுண்டும்
நத்தியுனைத் தேடுகிறாள் நாடு.

எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு,
பத்திராசிரியர்.

———

# ஸமஸ்கிருத நாடகங்கள்.



ஸமஸ்கிருத நாடகங்கள் முதன் முதலில் எப்பொழுது வரையப்பட்டன? அப்பொழுதுக்கும் தற்காலத்திய நாடகங்களுக்கும் பேதா பேதங்களென்ன, பழமையான நாடகங்கள் யாவை என்பதைச் சற்று சிந்திப்போம். மிக்கப் பழமையானதும் நாடக நடையில் வரையப்பட்டதுமானவை ருக்வேதத்தில் காணப்படும் சில பாகங்களே. யமனுக்கும் யமிக்கும், புரூரவஸுக்கும் ஊர்வசிக்கும் நடக்கும் சம்பாஷணைகள் நாடக நடைக்கோர் உதாரணமாகும். முதன் முதலாக நம் நாட்டில் நடிக்கப்பட்டதாகக் கூறப்படும் நாடகம் மகா பாஷ்யத்தில் காணப்படும் "கம்ஸவதம்" அல்லது "பலிபந்தம்" எனப்படுவதே. சிலர் பாரதம் தேவர்களுக்கு முன்பாக ஸ்ரீ லக்ஷிமியின் ஸ்வயம் வரத்தை வர்ணிக்கும் நாடகம்போல் நடிக்கப்பட்டது என்பர். ஸம்ஸ்கிருத நாடகங்களுக்கும், மற்ற நாடகங்களுக்கும் மேல்நாட்டு ஆங்கில-கிரேக்க லத்தீன் பாஷைகளிலுள்ள நாடகங்களுக்குமுள்ள முக்கிய வித்தியாஸம் யாதெனில், ஸம்ஸ்க்ருத நாடகங்கள் என்றும் துக்ககரமாய் (Tragedy) முடிவதில்லை. சுகமும் துக்கமும் இடையிடையே ஆடையிலுள்ள நூலைப்போல் பிணைக்கப்பட்டு ஆநந்தமாய் முடிவதே ஸம்ஸ்கிருத நாடகங்களின் போக்கு. சில நாடகங்களில் பாடக்கூடிய அழகிய பாடல்கள் வசனத்திற்குப் பதிலாக உபயோகிக்கப்பட்டிருக்கும். மஹாகவி காளிதாஸரின் சாகுந்தலத்தில் அப்படிப்பட்டவை 200-பாடல்களிருக்கின்றன. சாதாரணமாக, ஸம்ஸ்க்ரத நாடகங்களின் கதாசாரம் புராணங்களினின்றும் பழய சரித்திரங்களினின்றுமே எடுக்கப்பட்டு, கவியின் வல்லமையால் புதியனபோன்று பிரகாசிக்கின்றன. ஸம்ஸ்க்ரத நாடகங்களில் தோன்றும் விதூஷகன் ஷேக்ஸ்பியர் நாடகங்களில் தோன்றும் விதூஷகனையொத்திருக்கிறது. மேல் நாட்டிலும் நம் நாட்டிலும் தற்சமயமுள்ள நாடகக் கொட்டகைபோன்று முன்னாட்களில் இந்தியாவில் கிடையா. நாடகங்கள் அரச சபையிலோ, இன்றேல் சிறிய பாட்டுவீடுகளிலோ தான் நடைபெற்று வந்தது. முக்கியமான சில நாடகங்களை இங்கு நாம் கவனிப்போம்.

1. சாகுந்தலம்:—இது காளிதாஸ மகா கவியினால் வரையப்பட்டது. இதன் கதா சாராம்சம் பாரதத்தினின்று எடுத்துக்கொள்ளப்பட்டது. ஸம்ஸ்க்ரத நாடகவுலகில் மிகுந்த கீர்த்தி வாய்ந்ததும், பல நாட்டினராலும் மிக்க புகழப்படுவதுமானது சாகுந்தலமே. ஜர்மன் கவியான (Goethe) 'கீதே' என்னும் கவி சாகுந்தலத்தைப்பற்றிப் புகழ்ந்து வரைந்துள்ள பாடல் எல்லோருக்கும் தெரிந்த விஷயமே.

2. விக்ரமோர்வசீயம், அல்லது பராக்கிரமத்தால் அடையப்பட்ட ஊர்வசி. ஊர்வசியென்னும் தேவ சபை நடனமாது அசுரர்களால் அபகரிக்கப்பட, புரூரவஸ் என்னும் பூலோகமன்னன் அவளைத் திரும்பவும் தன் பராக்கிரமத்தால் அவர்களிடமிருந்து மீட்கிறான். இருவர்களுக்கும் காதலுண்டாகிறது. ஆயி

றும். ஊர்வசி இந்திரலோகம் செல்ல வேண்டியதால் சென்று விடுகிறாள். பின்னர், லக்ஷ்மி சுயம்வரம் என்ற நாடகத்தை தேவர்கள்முன் நடிக்கும் சமயம் ஊர்வசி லக்ஷ்மிவேடம் பூண்டு நடிக்க, விஷ்ணுவேடம் பூண்டவன் "யாரைக் காதலிக்கின்றாய்?" என்று வினவ, தன்னையே மறந்து புருஷோத்தமனை (விஷ்ணுவை) என்பதற்குப் பதிலாக புரூரவஸை எனக் கூறிவிடவே, நாடக உபாத்தியாயரால் சபிக்கப்படுகிறாள். ஆயினும், இந்திரனுடைய கருணையால் சாபவிமோசன மார்க்கத்துடன் தான் அடைய எண்ணிய புரூரவஸையே யடைகிறாள். இது ருக்வேதத்தில் இருக்கிறது. இதே விஷயத்தை நம் காளிதாஸர் தம் கற்பனா விசேஷ மிகுதியால் உருக்கிய தங்கத்தை யொத்துப் பிரகாசப்படுத்தி யுள்ளார்.

3. **மாளவிகாக்னி மித்ரம் :**—இதுவே காளிதாஸரின் மூன்றாவது நாடகம். இதனில் காளிதாஸர் தம் நாட்டிய சாஸ்திர ஞானத்தையும், காதலானது தனது உதயமுதற்கொண்டு தன் பூர்த்தியை யடையும் வரை எங்ஙனம் அனலிலிட்ட மெழுகை யொத்துத் துடிக்கிறதென்பதையும் மிக்க அழகாய் வரைந்திருக்கிறார். காளிதாஸரின் நாடகங்களில் தோன்றும் விதூஷகர்களின் வார்த்தை ஒவ்வொன்றும் அளவில்லாத சிரிப்பையும், மிக்க உயர்ந்த ஹாஸ்யத்தையும் உடையதாகவே யிருக்கும்.

4. **நாகாநந்தா:**—இதுவும் மிக்க அழகிய நாடகமே. புத்தமத சித்தாந்தங்களை யொட்டி வரையப் பட்டுள்ளது. இதன் ஆசிரியர் பாணன் காலத்தில் ஹர்ஷவர்த்தன மன்னனின் சபையிலிருந்து வந்தாய்க் கூறப்படும் "தாவகன்" என்பவரே யாம்.

பவபூதியின் நாடகங்கள் மற்றைய நாடகங்களின்றும் சில விஷயங்களில் மாறுபடுகின்றன. அவர் நாடகங்களில் விதூஷகன் கிடையா. வர்ணனைகள் விதர்ப்ப தேசத்தை யொட்டிய மலை வனாந்திரங்களையே குறிக்கின்றன. மற்றவர்களைப்போல் காடு மலை ஆறு இவைகளை சாதாரணமாய் வர்ணிக்காது மிக்க வேகமான பதங்களுடன் மனதில் ஈட்டியால் குத்தியது போன்ற வார்த்தைகளால் வர்ணிப்பதே இவர் வழக்கம். இவர் வரைந்துள்ள நாடகங்கள் மூன்று அவையாவன :—

5. **மாலதீமாதவம் :**—பிரகரணம் எனப்படும் நாடக வகுப்பைச் சார்ந்து பத்து அங்கங்களுடன் கூடியது. உண்மைக் காதல் என்பதானது என்றும் பரிசுத்தமானது என்று காட்டுவதற்கு அறிகுறியாயுள்ளது இந்நாடகமே. எங்ஙனம் மாலதியும் மாதவனும் நேசிக்கிறார்களென்றும், எப்படிப் பலவாறான இடையூறுகள் இடையிடையே நுழைந்து இவர்களின் மனதை வாட்டுகிறதென்றும், கடைசியில் எல்லாவிதமான இடையூறுகளும் ஒழிந்து காதலர்கள் தங்கள் தங்கள் காதலிகளை யடைந்து எவ்வாறு இன்புறுகிறார்களென்பதும் படிக்கப் படிக்க ஆநந்தமாயிருக்கும். காமந்தகி என்ற பெண்சந்நியாசியின் புத்தி சாதுர்யமும் சமயோசித யுக்தியும் மெச்சத்தகுந்தது. (தமிழில் ஆநந்த கதா கல்பகம் ஐந்தாம். வால்யத்தில் மாலதீ மாதவம் ஸம்பூர்ணமாய் முடிவு பெற்றுள்ளது.)

---

பழைய காலத்தில் ஆசியாவின் கிழ்ப்பகுதி முழுதும், பர்மாவிலிருந்து ஜப்பான் வரை, எல்லாம் இந்தியாவுடன் நெருங்கின ஸ்நேகத்தளையில் கட்டுப்பட்டிருந்தது. அன்று நமக்குள் ஜீவமயமான உள்ளத்தொடர்பு இருந்தது.

6. "மஹாவீர சரிதை" அல்லது "வீர பராக்கிரமசாலியான ராமன்":-இது பவபூதியின் இரண்டாவது நாடகம். கதை ராமாயணத்தினின்று எடுக்கப்பட்டிருப்பினும், அதற்கும் இங்கு கூறப்பட்டுள்ள விவரங்களுக்கும் கொஞ்சம் வித்தியாஸ மேற்படுவதின் காரணம், க்ரந்த கர்த்தாவின் கற்பனு விசேஷத்தினுலேயே என்பது நன்கு விளங்கும். எழு அங்கங்களுடன் கூடி ராம பட்டாபிஷேகத்துடன் முடிவடைகிறது.

7. 'உத்தமராம சரிதை,' அல்லது 'ராமனின் பிற்கால வாழ்வு":-இது சோகரஸத்திற்கும் வர்ணனைகளுக்கும் மிக்க கொண்டாடப்படும் நாடகம். இது பவபூதியின் மூன்றுவது நாடகமாகும்.

(தொடரும்.)

K. V. S. வாஸ்.



உண்மையான சக்தி ஆயுதங்களில் இல்லை அவற்றைக் கையாளும் மனிதனிடமே உள்ளதென்பதை அறியவேண்டும்.

# தமிழ் மகன் கனவு.



கதிரவன் அப்பொழுது தான் கீழ்த்திசையில் தோன்றினன். இருள் நீங்கி செவ்வொளி எங்கும் பரவலாயிற்று. விடியற்காலையில் விழிக்கும் பறவைகள் மகிழ்ச்சியுடன் கூவலாயின. அத்தருணம் தனிமையாய் நான் சாலைவழியே ஊருக்கு அப்பால் நோக்கிச் சென்றுகொண்டிருந்தேன். இயற்கையின் விநோதங்களும், இறைவனது அருட்பெருஞ்சோதியுமே என் மனத்தில் குடிகொண்டிருந்தன. சுற்றிலுமுள்ள வயல்களைப் பார்த்துக்கொண்டே மெல்ல நான் நடந்துபோனேன். ஆகா! இதென்ன தோற்றம்! திடீரென என்முன் ஓர் மாது தோன்றினள். அவள் கூந்தல் கலைந்திருந்தது. கண்களினின்றும் தாரை தாரையாய் நீர் வழிய அன்னாள் அழுதுகொண்டிருந்தனள். 'பெண்ணென்றால் பேயுமிரங்கும்' என்பதற்கிணங்க என் மனத்தின்கண் இரக்கமுண்டாயது. அவளருகிற் சென்று நான் "மாதே, நீ யார்? நினக்குற்ற இன்னல் யாது? தனிமையான இவ்விடத்தில் நீ இங்ஙனம் அழுவது என்கொல்?" என வினவ, அம்மாது தலை நிமிர்ந்து நோக்கி நான் ஆண்டிருத்தலை உணர்ந்து துக்கமேலீட்டால் மறுபடியும் தேம்பித் தேம்பி அழுவதாயினள். பின்பு ஒருவாறு மனந்தேறி அவள் என்னை நோக்கி, "மகனே, நீ என்னை யாரென உணராதது எனது துர்ப்பாக்கியமே. இதென்ன விந்தை! தாயை யறியாத மகனும் உண்டா? சிறுவ! நான் தான் தமிழ்த்தாய்; இப்பொழுதேனும் என்னை நீ அறிந்தனையோ?" என உரைத்தனள்.

ஃ

அதுகேட்ட நான் "தாயே! நான் நின்னை யறியாதது என் பேதைமையே. தமிழகத்தில் மகுடம் புனைந்துலவும் நினக்குற்ற குறைதான் யாது விளம்புவாய்" என்றேன்.

ஃ

தமிழ்த்தாய்:—வாலிப! நான் மகுடம் புனைந்து செங்கோலோச்சிய காலம் சென்றுவிட்டது. 'தாய்க்கு இன்னல் இழைப்பாரிலர்' என்பது பொய்யாகி, நான் பெற்ற மக்களே என்னை இழிவுபடுத்தி விட்டனர். மதிப்பார் ஒருவருமிலராகி நான் அநாதையாகித் திரிகின்றேனே. அந்தோ! எத்துணை காலம் நான் இங்ஙனம் இருக்கவேண்டுமோ?

நான்:—அன்னாய்! நீ புகல்வது மெய்தான். தமிழரசியாகிய நின்னை இழிவுபடுத்துவது எங்கள் மடமையே. தாயே, தமிழின் பெருமை என்போன்ற சிறார்கட்கு முழுவதும் விளங்கிலதே.

தமிழ்த்தாய்:—நான் 'அகத்தியர் நாவிலே பிறந்து சங்கப்புலவர் நாவில் சஞ்சரித்து வித்துவான்களுடைய வாக்கிலே விளையாடித்' தமிழகம் முழுதும் பேரரசு செலுத்திவந்தேன். திருவள்ளுவர், கம்பர், புகழேந்தி முதலானோர் என்பால் அளவுகடந்த

---

தர்மவிதியிலே உண்மையான நம்பிக்கை செலுத்தினால் வாழ்க்கை பரிசுத்தப்படும். மனிதன் கண்டுபிடித்த உண்மைகளிலே மிகப்பெரியது தர்மவிதி.

அன்பு பூண்டு என்னை யாதரிப்பா ராயினர். மைந்தா! நீ ஒரு முறையே னும் 'திருக்குறள்' 'கம்ப ராமாயணம்' இவற்றை வாசித்ததுண்டா? அவற் றின் நயத்தை உணராது மாந்தர் எங் ஙனம் வாழ்கின்றனரோ? தமிழ் நாட்டு வேந்தரனைவரும் என்பால் மதிப்புக்கொண்டு என்னை வணங்கி வந்தனர். எனக்குச் சென்றவிடமெல் லாம் சிறப்பாயிருந்தது பாண்டியர்தம் தலைநகராம் மதுராபதியில் புக ழுடன் வதிந்துவந்தேன். ஆனல். இப்பொழுது என் நிலைமை யாது? தமிழை மறந்து மாந்தர் பிறமொழி களை ஆதரிப்பவராகி, என்பால் வஞ் சகராயினரே. ஐயோ! என் விதியும் இப்படியாயிற்றே!

என்று அவள் திரும்பக் கண்ணீர் சொரிந்தாள். சிறியேனுன என் மனம் கலங்கியது.

ஃ

தமிழ்த்தாய்:—நான் அவமதிக்கப் படும் விதம் ஒன்ரு இரண்டா? எண் ணிறந்தனவே. ஒருவருக்கொருவர் கடிதம் எழுதுவதென்ருல் அது ஆங்கிலத்தில் தான். தாய்ப்பாஷை யான தமிழ் மொழியில் எழுதும் ஒரு சிலரையும் மற்ருேர் எள்ளி நகையாடு கின்றனர். என்ன பேதமை! அற்பு தச் செயல்கள் செய்தது தமிழென அன்னுர் அறிகிலரே. இஃதுதான் இங்ஙனமெனில், சம்பாஷிப்பதேனும் தமிழில் கூடாதா? தமிழைப் பிற மொழிகளுடன் சேரக்கலந்து அதன் இனிமையைக் கெடுத்து விடுகின்ற னரே. அவைக்கண் சொற்பொழிவு நிகழ்த்துங்கால். தமிழகத்தில் பிறந்து தமிழ் மொழியில் வளர்க்கப்பெற்ற கல்விமான்களும் 'நான் தமிழில் உரையாட வல்லன் அல்லன்' எனக் கூறி, கேட்போருக்குச் செவ்வனே விளங்காத வேருெரு பாஷையில் பேசலுமாயிற்றே!என்னே காலத்தின் கோலம்!

என்று தமிழ் அரசி பெருமூச்சு விட்டாள். நான் இன்ன தியம்புவதெ னத் தெரியாது திகைத்து நின்றேன். நான் வாளாவிருந்ததலைக் கண்டு அவள் மறுபடியும் பேசத் தொடங்கினள்.

ஃ

தமிழ்த்தாய்:—தமிழ்த் தொண் டரை ஆதரிப்பவர் ஒருவரும் இலரே. ஆங்கிலத்தில் பயிற்சி பெற்றவர்கள் பெரும் உத்தியோகங்கள் பெறுகின் றனர். தமிழ் கற்றவர்கள் ஆங்கிலம் அறியாராயின் அன்னுர் பிழைப் பின்றி வறுமையால் பீடிக்கப்பட வேண்டியதுதான். எல்லாம் வல்ல இறைவ! இதுவும் உன் திருவுளமோ!

நான்:—நற்றமிழ்த்தாயே! அது என் பெரும் பிழையே. 'பிழைத்தது பொறுத்த லென்றும் பெரியவர் கடனே' என அறிஞர் அறைவரே. ஆதலின், சிறியோன் நானிழைத்த பிழையைப் பெரியோய் நீ பொறுத்தருள்வாய். கற்றவர் போற்றுங் கன்னியே! இனி உன்னை ஒருகாலும் மறவேன். 'தமிழைத் தக வுடன் சிரமது தாங்குவன்.'

தமிழ்த்தாய்:—மைந்தா! நீ செய் யப்புகும் செயல் தமிழ்மகனும் நினக்கு ஏற்புடைத்தே. ஆயினும், தமிழக மாந்தரனைவரும் என்னை

---

தான் பெற்ற ரூபாய்க்குச் சரிவரச் செலவு கணக்கை ஒப்புவிக்காமல் மிச்சத்தை எப்பமிட்டுவிட்டுத் தராமலே போனவர்கள், மறுபடி சந்திக்க மிக்க நாணமடைவார்கள். கண்டாலும் பேசப்பின்னடைந்து எந்த மூலையி லேனும் மறைந்துவிடுவார்கள். குற்ற நெஞ்சு படும் வேதனை கொஞ்சமா?

யாதரித்தாலன்றோ நான் பழசிலே பெறவேன்.

ஃ

இச்சமயம், யாரோ என்னை முதுகில் தட்டி எழுப்புவதுபோல் தோன்றியது. நான் கண்விழித்துப் பார்த்தேன். என் அயல் வீட்டுக்காரனான ராமு "நண்பா, மணி எட்டு ஆகிறது. இன்னுமா தூக்கம் எழுந்திரு" என்று கூறிக்கொண்டிருந்தான். நான் அறைமுழுதும் சுற்றிப் பார்த்துப் பின் நான் கண்டது கனவென உணர்ந்து ஏமாந்தேன்.

ஏ. ராகவாச்சாரி.





சிலருக்குச் செய்துவந்த உதவிகளைப் பிறகு புத்தி பேதத்தால் என் செய்ய என்று நினைத்து நிறுத்திவிடுகிறபோது, அந்த சமயம் வருமானமும் குறைந்து கடனும் ஏற்படவே—அந்த உதவிகளை நிறுத்தியதில் கண்ட லாபமாய்—முடிகிறது. பிறருக்கு உதவிகள் தாராளமாகச் செய்துகொண்டிருந்தபோதோ வருமானமும் அதிகமாய் வந்து, பல செலவுகளும் செய்து பாங்கியில் பணம் சேர்த்துவைக்கவும் கூடுமானதா யிருந்தது.




## கைம்பெண்களின் கண்ணீர்.

அமிர்தகுணபோதினி
ஆசிரியரவர்கட்கு,

ஐயா,

அமிர்தகுணபோதினியின் வாயிலாக, பொதுவாக தமிழ் நாட்டுப் பெண்கள் படும் கஷ்டத்தையும், முக்கியமாக கைம்பெண்கள் அனுபவிக்கும் துன்பங்களையும் அறிந்து, அவர்கள் கஷ்டத்தைப் போக்க வழியில்லையா என்று ஏங்கும் சகோதரர் V. பசுபதி ("கீழ்நாட்டுக் காரிகையார்" என்னும் கட்டுரை எழுதியவர்) போன்ற வாலிபர்களுள் நானும் ஒருவன்.

ஃ

மார்கழிமீ மலரில் "ஓர் கைம் பெண்ணின் துன்பம்" என்ற தலைப் பின்கீழ் சகோதரி - கோமளவல்லி அம்மாள் எழுதியிருப்பதை வாசித்துக் கஷ்டப்படாதார் யாருளர்? எனினும், விதவைகள் அனுபவிக்கும் துன்பத்தைக் கவனித்த சிலருக்கே அக் கட்டுரையின் உண்மை நன்கு புலனாகும்.

ஃ

கைம்பெண்கள் சில வழிகளால் தாங்கள் படும் கஷ்டத்தை சிறிது நிவர்த்தித்துக்கொள்ளலாம் என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். முதலாவது, விதவைகள் தங்களுக்கு நேர்ந்த விபத்தைப் பெரிதாக எண்ணாமல் தங்களுடைய வாழ்க்கையைப் பிறருக்கு நன்மை புரிதலிலும், தன்னைப்போன்ற கைம்பெண்களின் கஷ்டத்தை நீக்கவும் பாடுபடவேண்டும். கணவனை இழந்த ஸ்திரீ தன்னைத் தானே தாழ்மைப் படுத்திக்கொண்டால் பிறர் தன்னைப் பழிப்பதற்குச் சொல்லவேண்டுமோ? "ஒடுகிறவனைக் கண்டால் துரத்துகிறவனுக்கு இளப்பந்தானே." பிறருக்கு நன்மை புரிவதென்றால் உறவினருக்கு உதவுவதை நான் குறிக்கவில்லை. அது அதிக பயன் தருவதில்லை. என்னதான் உழைத்தாலும் உறவினர் ஒரு "சொட்டு" சொல்வார்கள். உறவினருக்கு உழைப்பதைத்தான் சகோதரி கோமளவல்லி அம்மாள் "சமயற்காரனோடு கஷ்டப்படவும், உக்ராண அறையில் இருந்து எல்லாம் எடுத்துக்கொடுக்கவும், பாதுகாக்கவும், யாராவது பிரசவித்தால் அவர்களுக்குப் பத்தியம் பண்ணவும், இன்னும் சிரமமான வேலைகள்........." என்று சொல்லுகிறார்கள். இவைகள் எவ்வளவோ கஷ்டமான வேலைகளே.

ஃ

ஏழைகளுக்கும், எளியவர்களுக்கும் உதவுவதே உண்மையான உதவியாகும். படித்த கைம்பெண்கள் பலர் இருக்கின்றனர். அவர்கள் எழுத்து வாசனை அறியாத தன் சகோதரிகளுக்குக் கல்வி கற்பித்து அவர்களின்

---

நாம் கேட்பது முழு அளவில் கிடைக்கவில்லையெனில், அது கொடுப்பவனின் விருப்பமில்லாமையாலன்று : நமக்கே முழு விருப்பத்துடன் கேட்க விருப்பமில்லாததலால்தான்.

கண்களைத் திறக்கலாம். கதைகள் சொல்லி நீதிகள் கற்பிக்கலாம். பின்னும், தாங்களே கூட்டங்களில் பேசப் பழகிக்கொண்டு தற்காலப் பெண்களின் தாழ்மையையும், கைம்பெண்களின் கேட்டையும் பிறருக்கு எடுத்துரைத்தால் அதனால் நல்ல பயன் கிடைக்கும். இப்படிப் பேசுவதனால், தான் எவ்வித நன்மை அடையாவிடினும், தன்னைப்போன்ற பல ஏழைப் பெண்கள் நன்மை அடைவார்கள். ஆனால், அவ்வித வேலைக்குப் பெரியோர்களின் உத்தரவும், சிறிது தைரியமும் வேண்டும். "ஆண்பிள்ளை மாதிரி வெட்க மில்லாமல் பேசுகிறாள்" என்று சில பேதைகள் குறை கூறுவார்கள்; ஆனால் நினைத்துப் பார்த்தால் வீண் வம்புபேசிக் காலத்தைக் கழிப்பதைவிட, சீர்திருத்த வேலைகள் செய்வதற்குப் பெண்கள் முற்படுவார்களானால் கனவிலும் கருத முடியாத பயனை உலகம் அடையும். ஆவதும், அழிவதும் பெண்ணாலல்லவா?

ஃ

"எங்கள் அற்ப வாசிப்பினால் அப்படிப்பட்ட காரியங்கள் செய்ய இயலுமா?" என்ற கேள்வி சிலருக்குப் பிறக்கலாம். அற்ப வாசிப்பினால் எதுவும் முடியும். அதற்கு மேலும் முடியும். "மனமுண்டானால் வழி உண்டு" என்பதைத் தவிர வேறு என்ன சொல்லமுடியும்.

ஃ

"இளைத்தவன் மனைவி எல்லோர்க்கும் மைத்துனி" என்பது போல், உதவியற்ற கைம்பெண்களை உபத்திரவப் படுத்துவது உலக வழக்கமாயிருக்கிறது. ஆனால், "ஏழைகள் அழுத கண்ணீர் கூரியவாளொக்கும்" என்பதை அறியாது நடக்கும் மனிதர்களின் புத்தியீனம் என்னே! எல்லாம் வல்ல இறைவனின் முன் சகல ஜீவராசிகளும் சமமே என்பதை அறியாது எளியாரை வலியார் வாட்டுதலும், வலியாரைத் தெய்வம் வாட்டலும் இயற்கையாகவே நடந்து வருகிறது.

ஃ

காலச்சக்கரம் அதிக வேகமாய் சுழன்று ஓடுகிறதென்பதைக் காணும் சகோதரிகள் கடவுள் கண் திறக்கிறார் என்பதை உணருவார்கள். சூரியன் முன் பனியேபோல் தங்களுடைய கஷ்டமெல்லாம் நீங்கும் காலம் நெருங்கி இருக்கிறது என்பதை ஸகோதரிகள் அறிந்து சந்தோஷமாயிருப்பார்களென்று எண்ணுகிறேன். "தன்கையே தனக்குதவி" என்றபடி பெண்கள் தங்களுடைய நன்மைக்குத் தாங்களே முயற்சி செய்யவேண்டும். "God helps those who help themselvs" என்றபடி, தன் முயற்சி செய்கிறவர்களுக்குக் கடவுள் நிச்சயமாய் உதவி செய்தே தீருவார்.

ஃ

கடைசியாக, சகோதரிகள் எவ்வளவு கஷ்டப்பட்டாலும், தாங்கள் சந்தோஷமாகவே இருப்பதாக நினைத்துக்கொண்டு மனம் தேறினால் சந்தோஷமாகவே யிருப்பார்கள். உலகில் ஒவ்வொருவருக்கும் ஒரு கவலை இருந்துகொண்டு தானிருக்கிறது. ஆதி முதல்வன் அனைவருக்கும் ஆனந்தம் அளிப்பாராக.

ஓர் சகோதரன்.

---

புதிய நண்பர்கள், வீட்டுக்குள் வரக்கூடாத அறைகளுக்குள்ளெல்லாம் மெதுவாக எட்டிப் பார்த்து நுழைய வழி கிடைக்குமாவென்று எதிர்பார்க்கிறார்கள். அப்பொழுது அவ்வீட்டுக்காரனின் மனம் இந்த அதிகப்பழக்கத்தால் என்ன நேருமோவென்று திக் திக் எனப் பதறுகின்றது.

[பதிபை யிழந்த நமது ஸகோதரிகளின் கஷ்டங்கள் தக்க ஜீவனார்த்த ஆதரவு கிடைக்குமாயின் ஒரு பாதி விலகிவிடும். கையில் பணச் செல்வாக்குடனிருக்கும் கைம்பெண்களை மற்றவர்கள் கேவலப்படுத்துவதில்லை. எல்லோருக்கும் செல்வப்பெருக்கு உண்டாவதும் சாத்தியமல்ல. ஆதலின், பிறரது கையை எதிர் நோக்காமல் தாங்களே சுயமாக ஜீவனம் நடத்திக்கொள்ளக் கூடிய தையல் முதலிய வீட்டுத் தொழில்களையும், பாடசாலைகளில் உபாத்தியாயனியாக அமர்தல் போன்றவற்றையும், இன்னும் இது போன்ற கௌரமானவற்றையும் மேற்கொண்டு தங்களின் சொந்த சம்பாதனையில் ஜீவிக்க முயன்றால் எவரும் அதிகாரம் செய்யவோ, ஹிம்ஸிக்கவோ, இழிவுபடுத்திப் பேசவோ முடியாது. தொழில் செய்து உழைத்து ஜீவிக்கும் வகுப்பிலுள்ள கைம்பெண்கள் சுய சம்பாதனையுடன் இருப்பதால், பிறரது கையை எதிர்பாராமலே மதிப்புடன் வாழ்கின்றனர். சுய ஜீவனத்திற்கு எதுகரமின்றி மற்றவரது கையை எதிர் நோக்கவேண்டியுள்ள நிலைமையே நடுத்தர வகுப்பிலுள்ளகைம்பெண்கள் படும் கஷ்டங்களுக்கெல்லாம் முக்கிய காரணமாகும்.—ப-ர்.]



## நட்டாற்றில் கைவிடுதல்.

சிலர் ஒருவன் வீடு கட்டுவதற்கு உதவியாக இருப்பதாய்க்கூற, இவர்களை நம்பி எல்லா சாமான்களையும் வாங்கிப் போட்ட பிறகு நடுவே ஜாடையாய் ஒதுங்கிப்போய் விடுகிறார்கள். வேறு சிலர் ஒரு சங்கதியில் தாங்கள் துணையாக இருந்து பாதிவரை செய்துவிட்டு இடையில் அவர்களிடம் கடன் கேட்டுப் பெற்றுக்கொண்டு பிறகு கடனைத் தராமலும் உதவிக்கு வராமலும் போகிறார்கள். இன்னும் சிலர் தங்களின் அவசரத்திற்குக் கேட்டபோது பணம் தரவில்லையென்று கோபித்து நீங்கிவிடுகிறார்கள். விவாகத்துக்குச் சிலரை நம்பப்போக, அவர்கள் நடுச்சமயத்தில் ஒரு கலகமிட்டுக்கொண்டு வண்டியேறிவிடுகிறார்கள். இவ்விதமே, நடுவில் கைவிடுகிற வைத்தியர்களும், தொழிலாளிகளும், உறவின்முறையாரும், நேசர்களும் உண்டு. ஆகவே, தன்னையே முதலில் ஒருவன் நம்பிக்கொண்டு, மற்றவர்கள் உதவிக்கு வரினும் வராவிடினும் தானே செய்து முடித்துவிடக்கூடிய ஆற்றலுடன் ஒரு காரியத்தைத் தொடங்கிக்கொண்டு, மற்றவர்களைப் பேருக்குமட்டும் உதவியாக வைத்துத் தன் சொல்லே எச்சங்கதியிலும் மேல் நிற்கும்படி செய்தால், எவரும் எந்த ஆர்ப்பாட்டமும் செய்ய முடியாது.

# வில்லியம் வ்ஸமித்
## பூமிதத்துவ சாஸ்திரி
## 1769—1839.



வில்லியம் வ்ஸமித் என்ற பூமி தத்துவ சாஸ்திரி 1769 ம் வருஷத்தில் பிறந்தார். இங்கிலாந்தில் முதல் முதல் பூமி தத்துவ சாஸ்திரத்தைக் கண்டறிந்தவர் இவரேதான். இவருடைய தந்தை அக்ஸ்போர்டு மாகாணத்தைச் சேர்ந்த சர்ச்சில் என்னும் ஊரில் சாமானியமான கிருஷிகராயிருந்தார். இளமையிலேயே அவர் இறந்து போனதனால் வில்லியம்ஸ்மித்து ஒரு கிராமப் பாடசாலையில் கற்கப் புகுந்தார். அங்கே கற்றதெல்லாம் கூடி அற்பக் கல்விதான். அவ்வள வேனும் கற்க அவர் கிரமமாய்ப் பள்ளிக்குப் போகிறதில்லை; வியர்த்தமாய்த் தெருவில் உலாவித் திரிவார். முட்டைக்கல் முதலான கற்களை அதிசயமானவைகளென்று பொறுக்கிக் கொண்டு வீண் காலம் போக்குவார்.

அவர் படம் எழுதவும், வர்ணம் கொடுக்கவும், நிலம் அளக்கவும் பரப்புக் கணிக்கவும் கிரமமாய் எவரும் போதிக்காமல் தாமாகவே சாதனை பண்ணிக்கொண்டு வந்தார். இப்படிப் பிறர் உதவியின்றித் தம் முயற்சியாற் கற்றுக் கொஞ்ச காலத்திற்குள் விசேஷ விற்பத்தி யுடையவரானார். ஆகவே, அயலூரில் நிலம் அளக்கும் நிபுணர் ஒருவருக்குத் துணைவராக அவருக்கு அலுவல் கிடைத்தது. அவர் நிலம் அளக்கப்போகும் மார்க்கத்திலும், அளக்கும் நிலத்திலும் காணும் வெவ்வேறு வித மண்ணின் பாங்கையும், பூமியின் அடிப்படைத் தொடரையும் கருத்தில் ஆழ்ந்தச் சிந்தித்து வந்தார். அவர் பூமியின் அடிப்படைத் தொடரை விளக்கும் படம் ஒன்று சித்தம் செய்ய நினைந்த பொழுது அவருக்குப் பருவம் இருபத்து மூன்று. இந்தப் படம் அச்சிட்டுப் பிரஸித்தப்படுத்த 1814-ம் வருஷம் வரையிற் சென்றது. அந்தப் படம் பூகோள விவரண சங்கத்தின் சாலையில் இன்றளவும் இருக்கின்றது.

ஃ

ஆயினும், நிலம் அளந்து பிழைக்கும் பிரகிருதி அவருக்கு உண்டெனத் தோன்றியது. பாலிய வயதிலே கண்காணும் எதையும் கருத்துக் கூர்ந்து கவனிப்பது அவருடைய இயற்கையாக இருந்தது. அவர் தேறத் தெளிய ஒரு முறை கண்டதை ஒரு பொழுதும் மறப்பதில்லை.

ஃ

ஓயாது வருந்தி உழைத்துக் கொண்டு பிரயாணம் போகும் மார்க்கத்தில் அவர் பூமியின் இயற்கையைச் சோதித்தறிய அறிய, விரைவிற் பெருகும் அவ்விலக்கணத்திற்குப் பொது விதி கட்டி எழுதி வைத்தார். அற்ப விஷயமானாலும் அவர் கண் காணும் எதையும் கருத்தாய்ச்

---

நாம் உயர்ந்த கல்விப்பயிற்சி பெற்றுமேயல்லாமல் உயர்ந்த யோசனைகள் பண்ணவில்லை. பிறர் சொல்வதை ஆழமாய் ஊகிக்கும் புத்தியுமில்லை.

குறிக்காமல் விட்டதில்லை. விஷயங்களை நூதனமாய் அறியக்கிட்டும் சமயத்தை அவர் கண் ஜாடையாயிருந்து எட்ட விட்டதுமில்லை. எத்தனை இன்னல் இடைஞ்சற் படும்பொழுதும் அவர் மனங் குளிரத் துணிவு பெருகப் பொறுமை தளர்வற உழைத்து வந்தார். தைரியசாலியாகிய இந்தக் கல்விமான் அலுப்பற முயன்று சித்தஞ் செய்த இங்கிலாந்தின் தரை இயற்கைப் படத்தை எவ்வளவு பாராட்டினும் ஏற்குமென்றும், அதுவே முதன் முதலாகத் தயாரித்த அற்புத படமாகுமென்றும், பின் தோன்றிய பூமி சோதனையின் முயற்சிக் கெல்லாம் அந்தப் படமே அஸ்திவாரமாய் உதவியதென்றும் கொண்டாடப்படுகின்றது. சிறு பருவத்தில் பாடசாலைக்குச் சரிவரச் செல்லாத ஒருவரின் பிற்கால ஜீவியம் எவ்வளவு விசித்திரமாய் இருக்கிறது பாருங்கள். புகழ் அடைந்த மேதாவிகளிற் பலர் பாடசாலையிற் கற்றது மிகச் சொற்பமாகவே யிருந்து, பின்னர் தங்களின் முயற்சியாலேயே உலகப் பிரஸித்தமான அறிவும் பிரக்கியாதியும் கொண்டவர்களாயினர். கடைசியாக, வில்லியம் ஸ்மித் 1839 ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் நார்தம்டன் என்ற இடத்தில் காலமானார்.

## கடைசி முடிவு.

க்ஷணத்துக்கு க்ஷணம் காலங்கடந்து போகின்றது. மரணம் விரைந்து வருகின்றது. நமது சரீரம் மண்ணிற் புதைக்கப்படுகிற நேரமும் வரும். நாம் பிற்காலத்தினரின் ஞாபகத்தில் இல்லாமலும் போகலாம். நாம் இறந்தபின்பு அலறிப்பதறி வாரிஎடுத்து குளிப்பாட்டிப் பிறகு சுமந்து போகிறவர்கள் இப்போது நம்மிடம் வந்துபோகிறார்கள். ஒரு முழுநாள்வரைக்கும் நமது தேகத்தை நமது வீட்டில் வைத்துத் தாங்க மனமில்லாமல், பொழுது போகுது, வேளை சோற்றுக்கு நேரமாகுது என்று துரிதப்படுத்தி எடு, எடு எனச் சொல்லிப் பிறர் கையில் நம்மைக் கொடுத்து பின் நம்மைப்பற்றிய எண்ணமே இல்லாமற் போகிறவர்கள்தான் இப்போது நம்மோடு உண்ணுகிறார்கள். நம்மைக்கட்டி அழுகின்ற பெண்டுபிள்ளைகள் நம் கண்ணுக்குமுன் நிற்கிறார்கள்: நிருவாணமாக இங்கு வந்ததுபோல் நிருவாணமாகவே நாம் போகப்போகிறோம். நாம் இறந்த தினத்தில் நமக்குப் பாடைகட்டி அழுது நடத்தப்போகும் கூத்துகளை இப்போது இழவு வீட்டுக்குப் போய்ப் பார்த்தால் தெரியும். செத்தாரை இனி சாவார் சுமந்து செல்லும் உலகமிது.

நாம் சம்பாதிக்கும் அறிவு நமது தாய்ப்பாஷையைச் செழிப்படையச் செய்வதற்குப் போதாததா யிருக்கிறது.



# பிரபஞ்ச விலாசம்



1. மானமுடையவன், தன்னைப் பற்றி ஒருவர் இரண்டொரு வசை மொழிகள் பேசுவதைக் கண்டால், அதற்குக் காதில் விழாதவன்போலப் போய்விடுவான். மானமில்லாதவனோ அவனோடு எதிர்த்து நின்று சண்டை போட்டு, ஊரார் தன்னைப் பார்த்து எள்ளி நகையாடும்படி செய்துகொள்ளுகிறான்.

2. அவன் எவ்வளவு அவசரமான காரியத்தில் பிரவேசித்திருக்கிறான் என்பதை அறியாமலே, இவன் அவனிடம் போய் வீண்வார்த்தைகளை வளர்த்துக்கொண்டே அவனது முக்கியமான வேலைக்கு இடையூறு உண்டாக்கி விடுகிறான். அப்போது அவனது மனநிலை எவ்வாறு இருக்கும்?

3. புஸ்தகங்களை ஒருவரிடமிருந்து இரவல் வாங்கிப் படித்தபின் திருப்பிக் கொடுக்கும்போது புஸ்தகத்தில் தாங்கள் ஏதாவது வைத்திருக்கிறோமா என்று கவனித்துப்பார்த்துக் கொடுப்பதில்லை. இது அவர்களது அவசர புத்தி.

4. சிலர், பிறர் வருத்தப்படுவதைப் பார்ப்பதிலேயே சந்தோஷப் பட்டுக் கொள்கின்றனர்.

5. வீட்டிற்கு வந்த விருந்தினர்களை வெளியேற்றுவதற்கு, தங்கள் வீட்டுக் குழந்தைகளைவிட்டே விருந்தினர்களிடம் அடிக்கடி காசுகேட்கும்படியாகவும், எப்பொழுது ஊருக்குப் போகப் போகிறீர்கள் என்பன போன்ற கேள்விகளையும் கேட்கும்படி தூண்டிவிடுகின்றனர். இந்நிலையில், விருந்தினர்கள் தங்கள் ஊருக்குப் போகாமல் எவ்விதம் அங்கேயே நீடித்துத் தங்க முடியும்?

6. சிலருக்கு, அவர்களைப்பற்றிக் கொஞ்சம் புகழ்ந்தும், அவர்களது விவாதத்தை ஒட்டியும்பேசிவிட்டால் தங்களைப்பற்றிப் புகழ்ந்தவருக்குப் பொருளுதவியும் மற்ற இதர சவுகரியங்களையும் எளிதில் வழங்கிவிடுகின்றனர். ஆனால் தங்களைப்பற்றிப் புகழ்ந்தவரின் உண்மையான அபிப்ராயத்தையும், கட்சியையும் அவர்கள் உற்றுக் கவனிப்பதில்லை.

7. கதைகளைப் படித்துக்கொண்டிருக்கும்போதே சிலருக்கு, அக்கதையில் கூறப்பட்டிருக்கும் இடம், காலம் பாத்திரங்களின் இலட்சணங்கள் முதலியவைகள், கதை படிப்பவர்களின் அகக் கண்களுக்கு முன் தோன்றி, உண்மையில் அப்போதே நடந்து கொண்டிருக்கிறதுபோலிருக்கும். அப்பேர்ப்பட்டவர்கள் காலக்கிரமத்தில் சிறந்த கற்பனா சக்தியினையுடைய கதாசிரியர்களாகவும், அறிஞர்களாகவும் ஆகி, உலகுக்கு அருந்தொண்டாற்றுவர் என்பதுறுதி.

8. எவ்வளவோ உயிருக்குயிரான தோழர்களையும் ஒரு அற்பமான விஷயம் பிரித்துவிடுகிறது.

9. சிலர், ஒருவரைக் குறித்த நேரத்தில் வரச்சொல்லிவிட்டு, அந்த நே

---

*மனிதன் தர்மநெறியில் பக்குவப்படாத ஆரம்ப நிலையிலே, தான் அஞ்சும் தெய்வத்தின் மகிமை பற்றியே அதனிடம் பக்தி செலுத்துகிறான்.*

ரத்தில் தாம் வீட்டிலிருக்கவேண்டு மே என்ற எண்ணத்தையும் மறந்த வர்ளாய் எங்காவது போய்விடுகின்ற னர். அவர். வீட்டுக்கு வந்து அலைந்து போவதுதான் மிச்சம்.

10. தான் பேசும்போது. தனது வாயினின்று எச்சில் சிறுதுளிகளாக, தன்னோடு பேசிக்கொண்டிருப்பவர் களின் மேல்விழுகின்றது என்பதைக் கவனிப்பதில்லை மேலும். தனது வா யினின்று துர்நாற்றம் வருவதைக் கண்டு தூர விலகி உட்காருகிறார் கள் என்பதையும் தெரிந்துகொள்ளா மல், மேலும் மேலும் அவர்களிடங் நெருங்கிப் போகின்றனர்—பேசுகின் றனர்.

11. சிலருக்கு, தாங்கள் எழுதிக் கொண்டிருக்கும்போது எவராவது பக்கத்திலிருந்தால் எழுத்து ஓடுவ தில்லை; பக்கத்திலிருப்பவரும் அதைக் கண்டு எளிதில் விலகிக் கொள்வதில்லை.

திரு. வீ. மு. செல்லையா.

II

1. தான்எழுதிய நாவலையே பின் னொருசமயம் நோக்கும்போது அது தன்னாலெழுதப்பெற்றதுதானா தன்னுடைய இருதய ஊற்றில் இவ் வளவு அழகுள்ள கற்பனாநய மிகுந்த வசன சோடினைகள் எப்படி ஊற்றெடுத்துப் பெருகிற்று என மிக வும் பிரமிப்பாகத் தோன்றி பன் முறைபடித்து மகிழச்செய்யும்.

2. ஒரு அன்பர் அடுத்த ஊரி லுள்ள அறிமுகமான ஒருவரிடஞ் சென்று தமது பெண்ணை அவர் வீட் டிற்குப் பக்கத்து வீட்டாரின் புத் திரனுக்கு விவாகஞ் செய்து கொடுக் கலாமாவெனக் கேட்க. அவர் அதை விடச் சிறந்த இடமொன்றுண்டெ னக்கூறி, தனது நண்பரின் பிள்ளைக் கிப் பேசி முடிவு செய்து விடுகிறார் விவாகமானபின் முன்னர் விசாரித்த வரன் எல்லாவழியாலும் உயர்வா யிருப்பதை அறிந்து ஏங்குகின்றார்.

3. சுருட்டு சிகரெட் பிடிக்கும் பழக்கமுள்ளஒருவர் தன் நண்பரிடஞ் சென்று இன்றுமுதல் இவ்வழக்கதை விட்டொழித்து விடுவதாகப் பிரமா ணம் செய்தார். பின்ன ரொருநாள் அவர் சுருட்டுக் குடித்துக் கொண்டி ருக்குஞ்சமயம் நண்பர்வந்துவிட, என் செய்வேன் பழக்கத்தின் கொடுமை சத்தியத்தையும் மீறும்படி செய்து விட்டது என்று வருத்தத்துடன் மொழிந்தார்.

4. இது நான் எழுதிய புத்தகம், இந்த வேஷ்டி என்னால் நூற்று நெய் யப்பெற்றது; இக்காய் கறி என்னு டை தோட்டத்தில் என்னால் பயிர் செய்யப் பட்டது; இவ்வீடு சிறியேன் சம்பாத்தியத்தைக் கொண்டே கட்டி யதுஎன்று தன்னுடைய உழைப்பின் மகிமையைக் கூறும்போது எவ்வளவு சந்தோஷ முண்டாகின்றது! உழைத்து உண்பதிலுள்ள ஆனந்தம் வேறெதிலுமில்லை.

(தொடரும்)

சி. வீ. நா. நாராயணச்செட்டியார்.

நேமத்தான்பட்டி.



ஒரு ஸ்திரீ தனது சம்பந்த அந்தரங்கங்களை வேறொரு ஸ்திரீக்குக் கூற, அவள் அதைத் தன் கணவனுக்குக் கூற. அவன் தன் நண்பர்களுக்கு ஏளன மாய்த் தெரிவிக்க, அவர்கள் அதை ஊர் முழுதும் சொல்லித்திரிய, இங்ஙனம் ஒரு வீட்டுத் தலைவனின் ஸயன அறையின் ரகசியம் அவனே யறியாமலே ஊர் முழுதும் பரவி விடுகிறது.

# பிரபஞ்சதரிசனம்

## பிரபஞ்ச உற்பத்தி



இவ்வுலகு எவ்வாறு தோன்றியதென்பதைக் குறித்துப் பற்பல மதஸ்தர்களும் வெவ்வேறு விதமாய்ப் பகர்கின்றனர். ஒரு மதத்தினருடைய அபிப்பிராயம் மற்ற மதத்தினருக்கு நேர் விரோதமாய்த் தோன்றுகின்றது.

1. ஹிந்துக்களின் கொள்கை :- ஹிந்துக்களுக்கு நான்கு வேதங்களே பிரமாணிக்கமானது. இவ்வேதம் இறைவனால் அருளப்பட்டதென்பர். ஸ்ரீமந் நாராயணன் முதலில் பிரம்மதேவனைச் சிருஷ்டித்து அவர் மூலமாக உலகையும் ஜீவராசிகளையும் படைப்பித்தார் என்பர். ஒரு யுகம் முடியுமாயின் யாவும் அழிந்து இறைவனிடம் ஐக்கியமாகி மீண்டும் பிரமனால் சிருஷ்டிக்கப்படுகின்றன. ஒரு சக்கரத்துக்கு எது ஆரம்பம்.எது முடிவுஎன்பது அறியக்கூடிய விஷயமல்லவா. அதேபோல் இவ்வுலகின் சிருஷ்டியும் என்று வேதங்கள் கூறுகின்றன.

2. கிறிஸ்தவர்களின் கொள்கை :-கிறிஸ்தவர்களின் வேதமாகிய பைபிலில் ஈசன் முதலில் உலகைப் படைத்து, பின்பு ஆதாம் என்ற ஒரு ஆடவனையும். அவனுக்குத் துணையாக ஏவாள் என்ற ஒரு பெண்ணையும் படைத்து.அவர்களின் மூலம் உலகில் பிரஜாவிருத்தி யுண்டாயிற்றென்பது கொள்கை.

3. இஸ்லாமியரின் கொள்கை:- ஆண்டவன் முதலில் ஒரு ஆத்மாவைப் படைத்தார். அவ்வாத்மா கடவுளைச் சிந்தித்துத் தியானம் செய்தது. அதனால் ஆண்டவன் மகிழ்ந்து பற்பல வகையினதான ஏழு ஸமுத்திரங்களைச் சிருஷ்டித்து அவற்றில் இவ்வாத்மாவை ஸ்நானம் செய்வித்து பின் ஓர் அழகிய மயிலாக்கினார். பின்பு அந்த மயிலின் வேர்வைத்துளிகளினின்று (சுவாசத்தினின்று) பல வகைப் படைப்புகள் தோன்றுவதாயின. ஈசன் மண்ணினால் ஆதம் எனும் மனிதனையும், அவனது அவயவமொன்றிலிருந்து ஏவாள் எனும் பெண்ணையும் படைக்க, அவர்களால் உலகம் பெருகியது.

4. பௌத்தர்களின் கொள்கை :—இவர்கள் ஈசனையோ அல்லது ஆத்மாவையோ ஒப்புக்கொள்ளாமல், எல்லாம் ஒரு சக்தியினுடைய மகாத்மியத்தால் நிகழுகின்றன என்பர். ஒருவனுக்கு மறுபிறப்பு என்

---

ஒளியால் ஜனங்கள் கூடுகிறார்கள்; இருளிலே பிரிந்து செல்கின்றனர்— இதனால் நாம் அறியவேண்டியதென்ன?

பது— "ஜீவிக்கவேண்டும்"-என்னும் ஆசையினின்றே உண்டாவதாக எண்ணுகின்றனர். சக்தி என்பது ஒரு விதை என்று கூறுகின்றனர். இப்பூவுலகுக்குமேல் 26-உலகங்கள் உள்ளன; மனிதன் தன் கர்மாவின் பிரகாரம் ஒவ்வொரு உலகினை யடைந்து, முடிவில் நிர்வாணம் என்று கூறப்படும் முதல் உலகினை யடைகிறான்; பின் மறுபடி அவனுக்குப் பிறப்பு இல்லை யென்று புத்த பகவான் சாற்றுகின்றார். ஆசை என்னும் தீய எண்ணமே மனிதனையும் நிர்வாணத்தையும் பிரிக்கின்றன என்பது புத்தரின் வாக்கியம்.

5. ஜைனியரின் கொள்கை :— இவர்கள் பரமாத்மா, ஜீவாத்மா, கர்மா. பிரகிருதி இவைகளை ஒப்புக் கொள்கின்றனர். கடவுளின் இருப்பை இவர்கள் ஏற்றுக்கொண்ட போதிலும், உலக சிருஷ்டிப்பில் அவருக்கு சம்பந்தமில்லை யென்றும், இறைவனைப்போலவே இவ்வுலகமும் அழிவும் தோற்றமும் இல்லாதது என்றும் கூறுவர். பூலோகத்தின் நடுவிலும், அதற்கு மேலும் கீழுமாக இரண்டு உலகங்கள் இருப்பதாய் இவர்களின் கொள்கை. பூவுலகிற்கும், அதற்கு அடியில் இருக்கும் உலகிற்கும் மத்தியில் 'அதோகதி' என்று ஓர் உலகும், அதற்குமேல் 'நரகம்' என்ற உலகும், அதற்குமேல் 'புவனலோகம்' என்ற பத்து உலகங்களும் இருப்பதாயும், அதற்குமேல்தான் பூவுலகம் இருப்பதாயும் நம்புகின்றனர். பூவுலகுக்குமேல் பிரகாசமான ஓர் உலகும், அதற்குமேல் இரண்டு உலகும், அதற்குமேல் 'மோக்ஷம்' என்ற உலகும் இருப்பதாகவும் கொள்கை. இந்தமோக்ஷ லோகத்தில் பந்தத்தினின்றும் விடுபட்ட ஆத்மா வசிக்கும். ஸ்வர்க்கத்தை யடைவதற்குத் தெய்வ உதவி தேவையில்லை யென்றும், தம் முயற்சியாலேயே எய்திடலாமென்றும் நம்புவர். ஜைனர்கள் தொழும் தெய்வம் விஷ்ணு புராணத்தில் கூறப்பட்டுள்ள 'அருகர்' என்பவர். இம்மூர்த்திக்கு ஜினன் என்ற மற்றொரு நாமமுமுண்டாதலின், இவரைத் தொழுவோர் ஜைனர்கள் என்று சொல்லப்படுவதாயினர்.

6. இவல்யூஷனிஸ்ட் (Evolutionist) கொள்கை :–இவர்கள் உலகம் தானகவே உண்டாயிற்றென்றும், முதலில் பூச்சி பறவைகள் உண்டாகி, பின் அவைகளின் பல பிறப்புகளால் மிருகமும், மிருகத்தினின்று மனிதனும், இவ்வாறே உலகிலுள்ள மண், செடி, கொடி, பூச்சி, பறவை, மிருகம், மனிதன் முதலியன தோன்றியதாகவும் கொள்வர். டார்வின் (Darwin) என்பவர் தாம் செய்த ஆராய்ச்சியினின்றும், மனிதன் குரங்கினின்று உண்டானான் என்று கூறுகிறார்.

7. அஞ்ஞஸ்டிக் கொள்கை ;— இவ்வுலகமும், அதிலுள்ள யாவும் ஈசனால் சிருஷ்டிக்கப்பட்டதே யாயினும், ஈசனைப்பற்றியோ, அவருடைய குணங்களைப்பற்றியோ, சக்தியைப்பற்றியோ, உருவத்தையோ அறிவது மனிதனால் ஆகாத காரியம் என்ற கொள்கை யுடையவர்கள்.

8. ஸோராஸ்டிக் கொள்கை:– இவர்களின் மதம் 3000—வருஷங்களுக்கு முன்னால் ஸொராஷ்டர் என்

---

நாம் நமது தேசத்து ஜனங்களை நம்மவரென்று பரிபூர்ணமாக புத்தியில் தரிக்கவில்லை உதாரணம் வேண்டுமானால் உத்தியோக பதவியிலுள்ளோர் செய்கிற ஸ்வஜன சேவலங்களையும் சிறுமைகளையும் நினைத்தாலே போதும்.

பவரால் ஸ்தாபிக்கப்பட்டது. கடவுள் முதலில் ஓர் யமனைப் படைத்த தாயும், அந்த யமன் இறைவனின் ஆணைப்படி உலகங்களையும் மனிதர்களையும் சிருஷ்டித்து, அம்மனிதர்களுக்கு ஞானோபதேசம் செய்த தாயும் இவர்களின் கொள்கை. ஸ்வர்க்கமும், நரகமும் கர்மாக்களின்படி உண்டாகின்ற தென்றும், பிறப்பு, மறுபிறப்பு இவைகள் உண்டென்றும் ஹிந்துக்களைப்போலவே என்றுகின்றனர். பூமியும், நெருப்பும் தேவதா ஸ்வரூபமான வஸ்துக்களென்று இவர்களின் கொள்கை. ஆதலின், இறந்த மனிதர்களைப் பூமியில் புதைக்கலாகாதென்றும், அக்கினியில் எரிக்கலாகாதென்றும், காட்டிலோ, மலையிலோ பிராணிகள் தின்று விடும்படி அவ்விடத்தில் வைத்து விடவேண்டுமென்றும் கூறுவர்.

முடிவாக, எம்மதத்தினர் எவ்வாறு கூறினும், உலகம் இறைவனால் படைக்கப்பட்டதென்பது மட்டும் எல்லா மதத்தினர்களும் ஒப்ப முடிந்த உண்மை. ஒரு மதத்தினருடைய கொள்கைகள் அந்த மதத்தினருக்கு மட்டுமே சிறந்ததாய், மற்ற மதத்தினர் வேறொரு கொள்கையாய் இருக்கிற நிலையில், ஒரு மதத்தினர் தங் கொள்கையே உயர்ந்ததென்று பிற மதத்தினருக்குக் கூறமுற்படுவதும், பிறமத அவதூணை புரிவதும் சரியன்று. அவரவர்களின் மதம் அவரவர்கட்குச் சிறந்ததாகத் தோன்றுவது சகஜம். காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு.

K. V. S. வாஸ்

## பயங்கரச் சூழ்வினையாளர்.

எந்த இடத்தில் கொள்ளிவைத்தால் நன்றாகப் பற்றிக் கொள்ளுமென்பதைச் சிலர் அறிந்திருக்கிறார்கள்! அறிந்த வாறு செய்துவிட்டு எதுமே தெரியாதவர்கள்போல் தம்மைக் காட்டிக்கொள்கிறார்கள். உள்ளுக்குள் பகையை வளர்த்துக்கொண்டு தீங்கு செய்வதற்கு நேரத்தை எதிர் பார்த்தபடியே சிலர் நம்மோடு உறவும் நேசமுமாய்ச் சுற்றிக் கொண்டு நிற்கிறார்கள். நேரில் சத்தியவந்தர்கள்போல் பேசிவிட்டுப் பிறகு தூர இருந்து படுகுழியில் வீழ்த்த என்னென்னவெல்லாம் செய்யலாமோ அவ்வளவும் செய்கிறார்கள். இச்சூதுள்ள மனிதர்களைக் காணுகையில், அவர்களின் விரோதமோ, நேசமோ—எதுவும் வேண்டாமென்று ஒதுங்கி அஞ்சி நின்றாலும், அதிலும் எப்படியோ ஒரு குற்றம் பேசப் புறப்பட்டுக்கொள்கிறார்கள். என் செய்வது?

ஒருவன் தன் பணமுழுவதையும் கொடுத்துப் பணப்பைகள் வாங்குவானாகில் அவனது மடமையை என்னென்பதோ? அவ்விதமே, தனது கற்பைச் சிறிய இச்சைகளுக்கு விற்றுவிட்டு அதற்காக சந்தோஷப்படுதலுமாம்.



# ஹாஸ்ய சஞ்சீவினி





சென்னை பச்சையப்பன் கலாசாலையில் வாசிக்கும் தன் மகன் ஒரு பெண்ணிடம் நேசங்கொண்டிருப்பதை அறிந்து கடுஞ்சினமடைந்த தந்தை பின்வருமாறு அவனுக்குத் தந்தி யடித்தார்.

“ நீ அப்பெண்ணின் நேசத்தை ஒழித்துவிடு. இல்லாவிட்டால் நான் இனி உன் செலவுக்குப் பணம் அனுப்பமாட்டேன். ”

உடனே மகனிடமிருந்து அவருக்குப் பின்வருமாறுபதில் வந்தது:-

“ இந்தத் தந்திக் கண்டதும் எனக்கு இருமடங்கு அதிகமாகப் பணம் அனுப்பவேண்டும். இல்லாவிட்டால் நான் அவளை மணந்துகொள்வேன். ” ∴

வேலப்பன் தனது இன்னுயிர் நேசனாகிய சதாசிவன் வீட்டில் சீட்டாடிக்கொண்டிருந்துவிட்டு வீட்டுக்குத் திரும்பும்போது திடீரென மழை பெய்தது. உடனே சதாசிவன் தனது குடையை எடுத்துவந்து வேலப்பனிடம் கொடுத்து; “ அடே ; இனிமேல் எப்போதாவது நான் உன் வீட்டுக்கு வந்துவிட்டுத் திரும்பும்போது இதுபோல் மழை பெய்தால் நீ எனக்கு இந்த உதவி செய்வாயா ?” என்று வினவினான்.

வேலப்பன் :—“ நான் இதுமட்டுமோ செய்வேன்? உனக்கு ‘ சாதம் ’ கூடப் போட்டு அனுப்புவேனே !”

∴

குழந்தை :—அப்பா ; நீ ஏன் என்னை அடிக்கடி முத்தமிடுகிறாய் ?

தந்தை:—நான் உன்மேல் அதிக பிரியம் கொண்டிருப்பதால்.

குழந்தை :—ஆனால். உனக்கு யார் மீது அப்பா அதிக பிரியம் ? அம்மா மீதா ? என் மீதா ?

∴

தாய் :—அடி மீனா ? இனிமேல் நீ அண்டை வீட்டு அம்மாக்கண்ணோடு சேராதே.

மீனா :—ஏன் அம்மா ?

தாய் :—அவள் கெட்ட பெண்.

மீனா :—ஆனால், அவள் என்னோடு சேரலாமே! நான் நல்ல பெண் அல்லவா ? ∴

உபாத்தியாயர் :—(சுந்தரம்) என்ற சிறுவனை நோக்கி, அடே ! இராமன் என்ற சொல்லுக்கு எட்டு வேற்றுமை கூறு.

சுந்தரம் :—(திடீரென எழுந்து) சீதாராமன், வெங்கடராமன், கலியாண ராமன், பரசுராமன், அனந்த ராமன், உத்தண்டராமன், சிவராமன், பலராமன், இராமன்.. சரிதானா ஸார் ?

∴

தலைமை உபாத்தியாயர்:—(பரீட்சையில் தவறிய மாணவனை நோக்கி) அடே. நீ உருகும் காக்கிக் குல்லாவும் அணிந்துகொண்டு இப்படிப் பாடசாலைக்கு வந்தால், இந்த வருடமும் உனக்குக் 'குல்லா'தான்.

மாணவன்:—இந்த வருடம் எனக்குக் கிடைக்கும் 'குல்லா' காக்கிக் குல்லாவாக யிருந்தால் மிக்க சந்தோஷமே ஸார்.

ஃ

ஐயர்:—"அடே குத்திரப்பயலே! என்னைத் தொட்டுவிட்டாயே. நீ நாசமாய்ப்போக. உன் தலையில் இடி விழ உன்னை நரகத்................"

நாயர்:—(கோபமடைந்து) அப்படியானால் நீர் என் தங்கையை என் 'சம்பந்தம்' செய்துகொண்டிருக்கிறீர்? அது தீட்டில்லையோ?

ஐயர்:-காமத்திற்குக் கண்ணில்லை என்று பெரியோர்கள் எழுதிவைத்த சாஸ்திரம் சொல்லுகிறது.

ந. கு. சங்கரலிங்கம்.

ஃ

தந்தை:—இந்தக் கார்டில் பிழை விழுந்து விட்டது. கிழித்தெறிந்து விட்டு வேறு கார்டு கொண்டுவா.

குமாரன்:—ஸ்டாம்பு ஒட்டுகிற கார்டா யில்லாமல் தபால் கார்டாகவே இருந்தால் இந்த வாய் இப்படிக் கிழித்தெறியும்படி சொல்லுமா?

ஃ

இராமன்:—இனி என்னிடமிருந்து கிரித்தபடியே எந்தப் புஸ்தகத்தையும் மூட்டை கட்டிக்கொண்டு போக முடியாது. நீ இரவில், இனும் மோசங்களைப்பற்றி எழுதிய வியாசத்தால் விழித்துக்கொண்டேன்.

பொன்னன்:—அடடா! நான் எழுதியது எனக்கே ஆபத்தாய் விட்டதா?

ஃ

தாய்:—காலையிலிருந்து எங்கேயடா போயிருந்தாய்?

புத்திரன்:—இனிமேல் என்னை 'அடா' என்று சொல்லாதே. எனக்கு ரயிலில் உத்தியோகமாய் விட்டது. உத்தியோகஸ்தரிடம் அதிக மரியாதையாய்ப் பேசவேண்டும் அம்மா.

ஃ

நண்பர்:-தினசரிப் பத்திரிகையை ஏன் நிறுத்தி விட்டீர்கள்?

புதிய சீயான்:-தபால்காரன் நாள்தோறும் வீட்டுக்கு வரட்டுமென்று தருவித்தது. இப்போது ஏஜண்டு மூலம் வருவதால் வேண்டாமென்று எழுதி விட்டேன்.

ஃ

மன்மதசாமி:—அதிக ஆடைகளை யணிவதில் "அந்த அவசரத்தில்" கழற்றுவது மிகக் கஷ்டமாகிறது.

புஸ்தகசாமி:—அப்படியே, தபாலில் பெற்ற புஸ்தகத்தையும் சீக்கிரம் படிக்க முடிகிறதில்லை. அதன் மேலுள்ள சுற்றுக்கடிதம், கயிறு இவற்றை யெல்லாம் எடுத்தெறிய வெகு நேரமாகிறது.

ஃ

நண்பர்:—நீங்கள் மத்தியானம் கொடுத்த நாவல் வெகு நன்றாயிருந்தது. வாசித்து முடித்துவிட்டேன்.

---

பழபகாளில் பரஸ்பரம் நமது ஹிருதய ஒற்றுமை பாஷாபேதங்களால் தடைப்படவில்லை. ஜாதி கர்வமாவது, உடம்பிலோ மதியிலோ நாம் வலியோமென்ற செருக்காவது நமது கட்டுறவைக் கெடுக்கவில்லை.

ஆசிரியர் :—நான் தந்து 3-மணி நேரந்தானே ஆயிற்று? அதற்குள் 500-பக்கமுள்ள புஸ்தகத்தைப் படித்து விட்ட லக்ஷணத்தை உங்களின் முகம் நன்றாகக் காட்டுகிறதே?

ஃ

லேட் முனிசிபல் கவுன்ஸிலர் :—நான் ஹானரரி மாஜிஸ்திரேட்டாக இருந்தபோது மோட்டாரில்****

வேலைக்காரன் :—தாங்கள் உத்தியோகம் விட்ட பெருமைகளைப் பேசுவதைவிட, உத்தியோகம் வகித்து அதைக் காப்பாற்றிக்கொண்டதைப் பற்றிப் பேசுவதாயிருந்தால் இன்னும் அதிக சிலாக்கியமாயிருக்குமே!

ஃ

அம்பட்டன் :—என்ன இவ்வளவு தாடியும் மீசையுமா? க்ஷவரம் செய்துகொண்டு எத்தனை மாதங்களாயிற்றோ? இதில் கூடவா செட்டு?

ஐயர் :—ஆறுமாதம் தானாயிற்று காலம் கஷ்டமாயிருக்கிறதல்லவா?

அம்பட்டன் :—விட்டுப்போன ஆறுமாதத்திற்கும சேர்த்துக்கொடுத்தால் தான் க்ஷவரம் செய்யமுடியும்.

ஃ

கமலா :—இந்தப் 'பார்க்' வேடிக்கை காணவந்தது போதும்! கூட்டத்தில் எவ்வளவு இடியும் குட்டும் படவேண்டியிருக்கிறது?

விமலா :—இந்த இடி, குட்டு ஒரு பெரிதா? ஸ்டாம்பிலுள்ள நமது அரசரின் தலையுருவம் தபாலாபீசில் தினமும் எவ்வளவோ முத்திரை இடி குத்து படுகிறதே!

ஃ

துப்பு :—நீ எங்கே போகிறாய்?

சுப்பு :—நானா போகிறேன்? இந்த ரயில் வண்டியல்லவா போகிறது.

துப்பு :—சரி எங்கே இறங்குவாய்?

சுப்பு :—பிளாட் பாரத்திலே.

துப்பு :—எந்த ஸ்டேஷனில் இறங்கப் போகிறாய்?

சுப்பு :—போலீஸ் ஸ்டேஷனல்ல, ரயில்வே ஸ்டேஷனில் தான்.

ஃ

கணவன் :—சீக்கிரம் இலைபோடு. ஆபீஸுக்கு நேரமாகிறது. அங்கே இன்னும் என்னடி செய்கிறாய்?

மனைவி :—தாங்கள் அன்புடன் கொடுத்த "அமிர்த குண போதினி"யை வாசித்துக் கொண்டு இருக்கிறேன், சற்று பொறுங்கள். இன்னும் ஒரேபக்கம்தான் பாக்கி.

ஃ

அவர் :—தாங்கள் எப்பொழுது வெளியூருக்குப் போகிறீர்கள்?

இவர் :—என் பெண் அ. ஆ. இ—முழுதும் கற்றுக் கொண்டபிறகு தான். இன்றுமுதல் சொல்லித்தர ஆரம்பித்திருக்கிறேன்.

ஃ

மனைவி :—பொங்கல் இவ்வளவு கொஞ்சமாயிருக்கே, எனக்கு வேண்

---

பழயதைப் புதிதாகவும், பலமற்றதைப் பலமுடையதாகவும், அவமானத்தை மாட்சிமையுடைய வெற்றியாகவும் மாற்றவேண்டுமானால், அதற்கு மனிதனிடத்தில் மறைந்து நிற்கும் தேவசக்தியால்தான் முடியும்.

47

டாம். எல்லோரும் தின்றபின் மிச்சமா—எச்சிலேயா—எனக்கு ?

புருஷன்:—எல்லாம் தெரியுமடி, என் தாய்செய்ததால் வேண்டாமென்கிறாய். உன் தாய் வகையார் கொண்டு வருவதும் இனி எனக்குத் தேவையில்லை. நீயே அதைப் புசி.

ஃ

நேற்று என் பள்ளிக்கூடத்திற்கு வரவில்லையென்று உபாத்தியாயர் கேட்டதற்குப் பையன் பதில் சொல்லாமல், ஒரு தீப்பெட்டியை அவரிடம் கொடுத்தான். அவர் அதைத் திறக்கவே அதிலிருந்து ஒரு தேள் அவர் கையில் ஏற, நடுங்கி உதறி விட்டு என்னடா இது என்றார்.

பையன்:—அந்தத் தேள் நேற்று என்னைக் கடித்ததால் பள்ளிக்கூடம் வரவில்லை. நான் பொய் சொல்லவில்லை என்பதற்கே, அதன் கொடுக்கை எடுத்துவிட்டுப் பத்திரப்படுத்திக் கொண்டு வந்தேன்.

ஃ

விசாலாக்ஷி:—நமது கிழட்டு சாஸ்திரிகளுடைய புது மனைவிக்குப் பிறந்த குழந்தை எப்படியிருக்கு ?

பத்மாக்ஷி:—அந்தப் புது மனைவிக்கு சங்கீதம் கற்றுக் கொடுக்கிற வாலிப உபாத்தியாயரின் முகம் போல அப்படியே பதிந்திருக்கு !

விசாலாக்ஷி:—எப்படியோ சாஸ்திரிகளுடைய வமிஸத்திற்கு அறுபதாவது வயதில் ஒரு குழந்தை உண்டாகிவிட்டதல்லவா?

## நமது தேக அமைப்பு.

நமது தேகமெங்கும் ஓடிக்கொண்டிருக்கும் இரத்தம் 29-பவுன் எடையுள்ளது. சாதாரணமாக, நடுத்தரமான ஒவ்வொரு மனிதனும் 150-பவுன் 6-அவுன்சு எடையிருப்பான். மனிதரின் மூளை எந்த மிருகங்களின் மூளையிலும் இரண்டு மடங்குக்கு அதிகமாகவே இருக்கும். ஒருவன் நிமிஷமொன்றுக்கு 20-முறை மூச்சு விடுவான். புருஷருள் ஒவ்வொருவருக்கும் உத்தேசமாக மூளை மூன்றரை பவுன் எடையும், ஸ்திரீகளின் மூளை இரண்டு பவுன் பதினொரு அவுன்சு எடையுமிருக்கும். ஒருமணி காலத்திற்குள் இருதயத்தின் வழியாக 140-பவுன் இரத்தம் செல்லும். ஒரு முறை மூச்சு விடுவதற்குள்ளே நாடி நான்கு முறையடித்துக்கொள்ளும். நாடி ஒருதரம் அடிப்பதற்குள்ளே பத்து பவுன் ரத்தம் நரம்புகளின் வழியாகச் செல்லும். ஸ்வாசாசயத்தில் 17-கோடியே 50-லக்ஷம் சிறு குழல்களுண்டு. சிறு குழந்தையாயிருக்கும்போது நிமிஷத்துக்கு 120-முறையும், காளைப் பருவத்தில் 80-முறையும், அறுபதாமாண்டில் 60-முறையும் நாடி அடித்துக்கொள்ளும். நாடிபோட்டம் ஆண்களிலும் பெண்களுக்கு அதிகமாயிருக்கும்.

# லீலாவதியின் சதி!

('உண்மை விளம்பி' எழுதுவது.)



"நாம் உயிருக்குயிராய் நேசித்து வரும் லீலாவதியின் கலியாணத்திற்குச் செல்ல ரஜா கிடைக்கவில்லையே! வருடம் முடியும் சமயமாதலால் ஒரு நாள் ரஜாகூடக் கொடுக்க முடியாதென்று அதிகாரிகள் கண்டிப்பாய்த் தெரிவிக்கிறார்களே!! கலியாணச் சடங்குகளுக்கு மாத்திரம் போய் உடனே திரும்புவதென்றாலும் குறைந்தது ஆறுநாள் ரஜாவாவது வேண்டும். நாம் போகாவிட்டால் லீலாவதி என்னென்ன எண்ணுவாள்! எவ்வளவு வருந்துவாள்?" என்று தன் அறையில் உலாவிய வண்ணம் யோசித்தான் கிருஷ்ணன்.

ஃ

கிருஷ்ணன் இளையவன்; லீலாவதி அவனைவிட மூன்று வருஷங்கட்கு மூத்தவள். இருவரும் நெருங்கின பந்துக்களாயிருந்ததன்றி பால்யமுதல் அன்யோன்யமாய் விளையாடி வாசித்தவர்கள். கிருஷ்ணன் உத்தியோக நிமித்தம் லீலாவதியைப் பிரிந்து அயலூருக்குப் போகுமுன் தான் எங்கிருந்தபோதிலும் லீலாவதியின் விவாகத்திற்குக் கட்டாயம் வருவதாக அவளுக்கு வாக்களித்திருந்தான். இத்தர்மசங்கடமான நிலைமையில் என்ன செய்வதென்று தன் நண்பன் ரங்கனிடம் கலந்து யோசித்ததில், கிருஷ்ணன் எப்படியாவது சிரமப்பட்டு ஒருநாள் ரஜாவாவது பெற்றுக்கொண்டு ஊருக்குப் போவதென்றும், அங்கு சென்றதும் தேக அசௌக்கியமென்று டாக்டர் சர்ட்டிபிகேட்டுடன் ஒருவார ரஜாவிற்கு மனு அனுப்பிவிடுவதென்றும் முடிவு செய்தார்கள்.

ஃ

கிருஷ்ணன் ஊர்போய்ச் சேர்ந்து லீலாவதியின் கலியாணத்தில் தன்னாலியன்ற உதவிகள்செய்தான். ஆனால், டாக்டர் சர்ட்டிபிகேட்டுடன் அனுப்பிய நான்காம் நாள் "கிருஷ்ணனை வேலையிலிருந்து நீக்கிவிட்டதாக" ஆபீசிலிருந்து இரண்டு வரி உத்தரவு வந்தது. இவ்விஷயம் கிருஷ்ணனுக்கு அதிக வருத்தத்தைக்கொடுத்ததென்று நாம் சொல்லவேண்டியதில்லை. லீலாவதி கிருஷ்ணனுக்குத் தேறுதல்சொன்னதன்றி அவ்வூரிலேயே இருந்து கலாசாலையில் சேர்ந்து வாசிக்கும்படித் தூண்டினாள். உத்யோகம் போய்விடவே கிருஷ்ணனுக்கும் அது நல்ல யோசனைதான் என்று தோன்றி அவ்வாறே செய்தான். கிருஷ்ணன் கலாசாலை போய்வரும் நேரம் தவிர காலை மாலை ஓய்வு நேரங்களிலெல்லாம் அநேகமாய் லீலாவதியின் வீட்டிலேயே கழித்தான். இவர்கள் இருவரும் பால்ய நேயர்களாதலாலும், லீலாவதி நெறி தவறாதவள் என்ற பூர்ண நம்பிக்கை

---

ஆபத்துக்குப் பின்வாங்காத விசுவாசமும், மானக்கடமைகளில் ஒரு மனப்பட்ட பக்தியும், சரணாகதியிலே நிறைவும், மரணத்தையும் விபத்துகளையும் பயமின்றி அங்கீகாரம் செய்யும் திறனும் வேண்டும்.

யாரும் கிருஷ்ணன் தன் வீட்டிற்கு அடிக்கடி வருவதைப்பற்றி லீலாவதியின் கணவர் பொருட்படுத்தவில்லை. லீலாவதி அவள் கணவரின் பூர்ண நம்பிக்கைக்கு அருகதை உடையவளா என்பது நம்மால் திட்டமாய்ச் சொல்ல முடியாது.

ஃ

கிருஷ்ணனுக்கு விவாகம் செய்ய வேண்டுமென்று அவன் பெற்றோர் ஏற்பாடுகள் செய்துவந்தார்கள். தன் சிநேகிதையான பத்மாட்சியை கிருஷ்ணன் மணக்கவேண்டுமென்று எண்ணிய லீலாவதி, கிருஷ்ணனிடம் தன் முழு சாமர்த்தியத்தையும் உபயோகித்துப் பார்த்தான். எவ்விஷயத்திலும் அவள் விருப்பத்திற்கு மாறாக நடவாத கிருஷ்ணன், பத்மாட்சி விஷயத்தில் மாத்திரம் மௌனம் சாதித்ததன்றி, தன் நண்பன் ரங்கனின் பந்துவாகிய லக்ஷ்மியை மணந்தான். தன் விருப்பத்திற்கு மாறாக கிருஷ்ணனை மணந்த லக்ஷ்மியின்பேரில் லீலாவதி துவேஷம் கொண்டபோதிலும் வெளிப் பார்வைக்கு லக்ஷ்மியிடம் போலி உறவு கொண்டாடினாள்.

ஃ

லக்ஷ்மி உத்தம ஜாதிப் பெண்டிர்க்குண்டான இயற்கை உணர்ச்சிகளால், லீலாவதி தன் விரோதி என்பதை ஆரம்பம் முதல் உணர்ந்ததால், அவளை அசட்டை செய்தாள். லீலாவதி சமயம் வாய்த்தபோதெல்லாம் கிருஷ்ணனிடம் லக்ஷ்மியைப்பற்றிக் கோள் சொல்லி தம்பதிகளுக்குள் சதா கலகங்கள் விளைவித்துக் கொண்டேயிருந்தாள்.

ஃ

போலிக் கற்களின் ஒளி முதலில் கண்களைக் கவர்ந்தாலும் நாளடைவில் அவைகளின் உண்மை வெளிப்படுவதுபோல், லீலாவதியின் சூழ்ச்சிகளும், நடவடிக்கைகளும் கிருஷ்ணனுக்கு சில விஷயங்களால் தெளிவாய்த் தெரிந்தபோதிலும், பழைய நட்பிற்காக அவளைத் தூற்றும் மற்றவர்களுடன் தர்க்கித்து லீலாவதிக்காகப் பரிந்து பேசி வந்தான். இச்சந்தர்ப்பத்தில் தன் நண்பன் ரங்கன் சில மாதங்கள் அவ்வூரில் வந்து இருக்கப்போவதாய் லிகிதம் வந்தது. நண்பரும் ஊர் வந்து சேர்ந்தார். லீலாவதி ரூபவதியாயில்லாவிட்டாலும், அதிக வாக்குச் சாதுரியமுள்ளவளாதலால் இரங்கன் ஊருக்கு வந்த சில நாட்களுள் அவனுடன் நெருங்கிப் பழகினாள். ரங்கன் ஒழிந்த நேரங்களிலெல்லாம் லீலாவதியின் வற்புறுத்துதலின்பேரில் அவள் வீட்டிலேயே கழித்தான்.

ஃ

கிருஷ்ணனும் ரங்கனும் இணைபிரியாத நேயர்கள் என்பதை அறிந்த லீலாவதிக்கு, அவர்கள் இருவரும் தன்னைப்பற்றிப் பேச நேரிட்டால் கிருஷ்ணன் ரங்கனிடம் என்னென்ன சொல்லுவானோ, அதனால் தன் சரித்திரமெல்லாம் எங்கு ரங்கனுக்கு வெளிப்பட்டுவிடுமோ என்று நினைத்தோ, மற்றெக்காரணத்தாலோ அவர்கள் இருவரையும் பேதித்துப்

---

உன் லாபத்தையே தேடு; அதனால் மற்றவர்களுக்கு எவ்வளவு நஷ்டமுண்டானாலும் கவனிக்காதே என்பது இக்கால நாகரீக மந்திரம். இது தெய்வத்தையும் கருணையையும் மறந்தவர்கள் செல்லும் பாதை. மனிதருக்குள்ள சம்பந்தமெல்லாம் அவரவரின் லாபத்தைக் கருதிய சம்பந்தம்தான்.

பிரித்துவிட்டால்தான் தன்னைப்பற்றிப் பேசமாட்டார்கள் என்று தோன்றவே, அப்படியே செய்துவிடத் தீர்மானித்தான்.

ஃ

ஒருநாள் கிருஷ்ணன் கலாசாலையிலிருந்து வந்தவுடன் லீலாவதி அவசரமாய் வரச்சொன்னதாக ஒரு பையன் அழைக்கவே, புஸ்தகங்களை மேஜைமேல் போட்டுவிட்டு உடனே போனான். அவன் போகும்போது லீலாவதி அதிக மிரட்சியான பார்வையுடன் உட்கார்ந்திருந்தாள்.

கிருஷ்ணன்:—என் என்னை இவ்வளவு அவசரமாய் வரச்சொல்லி ஆளனுப்பினாய்?

லீலவதி:—சங்கதி உன்னிடம் சொல்லாமலிருக்கவும் முடியாது. ஆனால் சொல்லவும் நா வரவில்லையே!

என்று மிகுந்த வணக்கத்துடன் மொழிந்தாள்.

கிருஷ்ணன்:—அவ்வளவு விபரீதமான சங்கதி என்ன நேர்ந்துவிட்டது?

லீலாவதி:—உன் நண்பன் ரங்கன் இருக்கிறாரல்லவா—?

கிருஷ்ணன்:—ஆம், நீயும் அவரும் இருக்கும் மாதிரியை நம் தெருவெல்லாம் பேசுகிறது.

லீலாவதி:—ஐயோ! நானென்ன சொல்வேன்; வீட்டிற்கு வரும் மனுஷனை நான் எப்படி நேருக்கு நேராய் வரவேண்டாமென்று சொல்வதென்றெண்ணி "அடுத்த வீட்டிற்குப் போகவேண்டும்; வேலை இருக்கிறது" என்று பலமுறை சாக்குப் போக்குச் சொல்லி அனுப்பியிருக்கிறேன். அப்படியிருந்தும் அவர் இங்கு அடிக்கடி வருவதும், என்னைப் பார்க்கும் பார்வைகளும் எனக்குச் சற்றும் பிடிக்கவில்லை. எனக்கு வரவர அவர் விஷயத்தில் பயமாயிருக்கிறது. இத்தர்மசங்கடத்திற்கு நீதான் ஏதாவது வழி சொல்லவேண்டும். உன்னைவிட எனக்கு உண்மையான நண்பர்கள் யார் இருக்கிறார்கள்? அவர் இனிமேல் இங்கு வராமலிருப்பதற்கு நீதான் ஏதாவது வழி செய்யவேண்டும். ஆனால், இவ்விஷயத்தைப்பற்றி அவரிடம் சொல்லாமல் வேறுவிதமாகச் சொல்லவேண்டும் என்றாள்.

எல்லாம் உண்மை என்று நம்பிய கிருஷ்ணன் தன் நண்பனை வெறுத்தான். லீலாவதியும் கிருஷ்ணனும் கலந்து யோசித்ததில், லீலாவதியின் வீட்டிற்கு ரங்கன் அடிக்கடி வருவது அவர் கணவருக்குப் பிடிக்கவில்லை என்று மாத்திரம் கிருஷ்ணன் ரங்கனிடம் சொல்லவேண்டுமென்றும், மற்ற விஷயங்களைப்பற்றிப் பேசக்கூடாதென்றும் தீர்மானித்தார்கள்.

ஃ

பேதை கிருஷ்ணனும் தானொருபேதையைப்பேராபத்தினின்றும் காப்பாற்றப் போவதாய் எண்ணினான். வழக்கம்போல் அன்று மாலை இரு நண்பர்களும் உலாவப் போனார்கள். கிருஷ்ணன் தன் நண்பனை நோக்கி "நான் இப்போது உன்னிடம் சொல்லப்போகும் விஷயம் உனக்கு வருத்தத்தை உண்டாக்கக்

---

தன்னைத்தான் அறிதல் சிரமமென்பதை நான் அறிவேன். குடிவெறியிலிருப்போன் தனக்கு வெறியில்லையென்று சத்தியம் பண்ணுவதுபோல. உலக மாய்கையிலுள்ள மனிதனும் தன்னிடம் அஞ்ஞானம் இல்லையென எண்ணுகிறான். தான் மிகவும் அறிந்துகொண்டுவிட்டது போலவும் நினைக்கிறான்.

கூடியதானாலும், நான் சொல்லக் கடமைப்பட்டவன் என்று எண்ணி என்னை வித்யாசமாய் எண்ணாமலிருக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்" என்றான்.

ரங்கன் :—என்ன கிருஷ்ணா! நீ பேசும் பீடிகையைப் பார்த்தால் ஏதோ விபரீத சமாசாரம் இருக்கிறாப் போலிருக்கிறதே. நான் உன்னை வித்யாசமாய் எண்ணக்கூடிய அவ்வளவு விசேஷமான சமாசாரம் என்னவோ?

கிருஷ்ணன் :—லீலாவதி உன்னிடத்தில் எப்படி நடந்துகொள்கிறாள்?

ரங்கன் :—இது என்ன கேள்வி? என்றால் இக்கேள்விக்குப் பதில் சொல்ல முடியாது.

கிருஷ்ணன் :—உன்னால் முடியாதென்றால் நான் சொல்வதைக் கவனி. நீ லீலாவதியின் வீட்டிற்குப் போய் வருவது அவள் பர்த்தாவிற்குப் பிடிக்கவில்லையாம். தான் இவ்விஷயத்தை உன்னிடம் எப்படித்தெரிவிப்பதென்று தயங்கி என்னை அழைத்து இச்சங்கதியை உனக்கறிவிக்கும்படி சொன்னாள். நீ என்னை வித்யாசமாய் எண்ணமாட்டாய் என்று நம்பியதால் தான் நான் இதை உனக்குத் தெரிவிக்க இசைந்தேன்.

ரங்கன் :—நீ சில தினங்களுக்கு முன் கலாசாலை வருஷாந்திர விழாவின்போது நடித்த நாடகமேடையின் நினைவுகள் இப்போது உனக்கு வந்துவிட்டதா என்ன! சரியான கதையை அமைத்து அதற்கேற்ப நடித்தும் விட்டாயே!

கிருஷ்ணன் :—அப்படி விளையாட்டாயிருந்திருந்தால் இப்போது நான் எவ்வளவு சந்தோஷமாயிருப்பேன். நான் சொல்லிய ஒவ்வொரு வார்த்தையும் உண்மையென்று வேண்டுமானால் பிரமாணம் செய்கிறேன்.

ரங்கன் :—உன் வார்த்தையில் எனக்குப் பூர்ண நம்பிக்கையுண்டு. நீ கூறிய சமாசாரம் நான் என்றும் எதிர்பாராததாகையால்தான், முதலில் சம்சயிக்க நேர்ந்தது. நீ வித்யாசமின்றி என்னிடம் உண்மையைக் கூறியதால் என் மனப்பூர்வமான வந்தனங்களை ஏற்றுக்கொள்.

என்று சொல்லிவிட்டுத்தனக்குள்ளேயே பின்வருமாறு எண்ணமிடலானான். "நம்மைத் தன் வீட்டிற்கு வரச்சொல்லிப் பலமுறை அழைத்த போதெல்லாம் நாம் அவள் பர்த்தா இல்லாத சமயம் வந்தால் அவர் விபரீதமாய் எண்ணுவார் என்று சொன்னதற்கு "என் பர்த்தாவின் சங்கதி உங்களுக்குத் தெரியாது; அவரைப்போல் நல்ல மனுஷ்யர் யார் இருக்கிறார்கள்? அற்ப புத்தியுடையவர்களல்லவா வித்யாசமாய் எண்ணுவார்கள்" என்று நமக்கு சமாதானங்கள் சொல்லியும், நாம் ஒரு நாளைக்கு அவளைப் பாராமலிருந்தால், மறுநாள் நம்மைச் சந்திக்கும்போது "உங்களைப் பார்த்து அனேக நாட்களாகிறதே" என்று இவ்வாறெல்லாம் சொல்லிய லீலாவதி இப்போது இம்

---

மனிதனுக்கு உணவும் வேண்டும்; அதை வைத்துண்ணப் பாத்திரங்களும் வேண்டும். ஆகாரம் சரிவரக் கிடைக்காமல் குறையுமிடத்தில், அது சமயம் பாத்திரம் வாங்குவதிலே அதிகப் பணம் செலவிடக்கூடாது. ஆகாரமே முதலில் முக்கியமாதலால் அதற்கே முதலில் அதிகபணம் செலவழிக்க வேண்டும். மற்ற உலக காரியங்களிலும் இவ்விதமே முக்கியத்தை உணர வேண்டும். ஒரு சண்டையில் அந்தச் சண்டையை முக்கியமாக எண்ணாமல், குடும்ப சமாதானத்தையே முக்கியமாகக் கருதவேண்டும்.

மாதிரி சொல்லக் காரணமென்ன? வாஸ்தவந்தான்! புருஷன் வீட்டிலில்லாத சமயம் மனைவியுடன் அன்னியனாகிய நான் தனித்து சம்பாஷித்தது தவறுதான். இனிமேல் லீலாவதி வீட்டிற்குப் போகவே போகக்கூடாது. அவளையாவது அவள் பர்த்தாவையாவது எங்கு சந்தித்தாலும் பேசக்கூடாது" என்று தீர்மானித்தான்.

இத்தீர்மானம் எத்தனை நாட்களுக்கோ?

கிருஷ்ணன் தன் நண்பன் லீலாவதியிடம் மிக்க கேவலமாக நடந்துகொண்டதாகவே எண்ணினான்.

ஃ

நண்பர்கள் இருவரும் எப்பொழுதும்போல் அன்யோன்யமாகவே இருந்தார்களானாலும். லீலாவதியைக் குறித்து ஒரு வார்த்தையாவது பேசுவது கிடையாது. மேற்கூறிய சம்பவங்கள் நடந்த நான்காவது நாள் ரங்கன் ஏதோ யோசித்துக்கொண்டே தனிமையாய் உலாவப் போய்க்கொண்டிருந்தபோது அவன் முதுகின்மேல் யாரோ மெதுவாய்த் தட்டவே, தூங்கி எழுந்தவன்போல் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். அப்படித் தட்டினது லீலாவதியின் பர்த்தா என்று தெரிந்தவுடன் ரங்கனுக்குண்டான ஆச்சரியத்திற்களவில்லை. அவர் ரங்கனை நோக்கி "எனப்பா எங்கள் வீட்டிற்கு வருவதையே நிறுத்திவிட்டாய்;" "நீ வரவில்லை என்று லீலாவதி பிரதி தினமும் ஆவலாதி சொல்லிக்கொண்டிருக்கிறாளே" என்றார்.

(வாசகர்களே! ரங்கன் என்ன பதில் சொல்லுவான்? நீங்கள் அவன் ஸ்தானத்திலிருந்தால் என்ன சொல்லியிருப்பீர்கள்?)

ரங்கன் அவர் கேள்விக்குப் பதில் சொல்லவேயில்லை. ஆனால், தான் அவசரமாய் தையற்காரனிடம் போவதாய்ச் சொல்லி, கடைவீதி பக்கமாய் சென்றுவிட்டான். இது இம்மட்டோடாவது முடிந்ததா? ரங்கன் வீட்டிற்கு லீலாவதி பிரதிதினமும் தவறாமல் போய் ரங்கன் மனைவியிடம் சம்பாஷித்து வந்தாள். ஆனால், ரங்கனை அவளால் ஒருநாளும் பார்க்க முடியவில்லை. இப்படி ஐந்தாறு நாட்கள் கழிந்தன. ரங்கன் ஒருநாள் லீலாவதியின் வீட்டிற்கடுத்த வீட்டிற்கு ஓர் அவசரகாரியமாய்ப்போக நேரிட்டது. அங்கு லீலாவதியைக் காணவே அவளைக் கவனியாதவன்போல் அவ்வீட்டுப் பெரியவரிடம் தான் போன காரியத்தைப்பற்றிப் பேசிவிட்டு வந்துவிட எண்ணினான். ரங்கன் வேண்டுமென்று லீலாவதியைக் கவனியாதவன் போலிருந்ததைநோக்கிய பெரியவர் "எனப்பா ரங்கா! உனக்கும் லீலாவதிக்கும் என்ன மனஸ்தாபம்? என்று கேட்டார்.

ரங்கன்:—ஒன்றுமில்லை.

பெரியவர்:—பதினைந்து நிமிஷங்களாக அவள் உன்னைப் பார்த்துக்கொண்டே நிற்க, நீ அவள் இருக்கும் பக்கங்கூடப் பார்க்காமல் இருந்துவிட்டு ஒன்றுமில்லை என்றால் இந்தக் கிழவன் நம்புவானா? உனக்குச் சொல்ல இஷ்டமில்லைபோலும்.

என்றார். இதற்குள் லீலாவதி ரங்கன் அருகில் வந்து,

---

வியாபாரம் பிரதானமென்றும், யோக்கியதை கேவலம் ஒரு சிறந்த தந்திரமென்றும் தற்கால உலகில் பலர் எண்ணுகின்றனர். பொய்யின் அலைகளும் மோசநம்பிக்கைத் துரோகங்களும் இவர்களிடம்தான் மிகுதி.

லீலாவதி :—ஒன்றுமில்லா விட்டால் என் இரத்துப் பத்து தினங்களாக என் வீட்டிற்கு வருவதில்லே? என்னை இப்போது பார்த்தும் பாராதது போலிருப்பதின் காரணமென்ன? என்றாள்.

ரங்கன் :—காரணம் உனக்கே தெரியுமாதலால் நான் இப்போது ஏதும் சொல்லவேண்டியதில்லே.

பெரியவர் :—(இருவரையும் நோக்கி) முதலில் ஒன்றுமில்லே என்றவர் இப்போது காரணம் லீலாவதிக்குத் தெரியும் என்கிறார். இவ் விஷயம் உங்களிருவருக்குள் பேசி முடிவு செய்யவேண்டியதாகையால் தயவுசெய்து லீலாவதி வீட்டிற்குப் போய் தீர்மானித்துக் கொள்ளுங்கள். கிழவன் முன்பு பேசவேண்டாம்" என்று சிரித்தவண்ணம் சொன்னார்.

லீலாவதி :—காரணம் எனக்குத் தெரியும் என்று சொல்வது எனக்கு ஆச்சரியமாயிருக்கிறதே. எனக்குத் தெரிந்தால், நான் என் உங்களைக் கேட்கவேண்டும்? நீங்கள் ஒரு காரணமுமின்றி என்மீதில் வீணே கோபம் கொண்டிருக்கிறீர்கள்.

என்று மேலே பேசுமுன், ரங்கன் அவளைத் தடுத்து தான் அவள் வீட்டிற்கு சாவகாசமாய் வந்து சொல்வதாய்ச் சொல்லி தன் வீட்டிற்குப் போகப் புறப்பட்டான். லீலாவதி அவனுக்குமுன் வெளியே வந்து தன் வீட்டு வாயிற்படியில் நின்றுகொண்டு ரங்கனை வழிமறித்துத் தன் வீட்டிற்குள் அழைத்துச் சென்றாள் என்பது மிகையாகாது.

ஃ

லீலாவதி வீட்டிற்குச் சென்ற ரங்கன் மௌனம் சாதித்தான். ஆனால், லீலாவதி அவனை நோக்கி "இவ்வளவு கோபம் என்மீதில் உண்டாவதற்கு நானென்ன தவறு செய்தேன்? மேலும் காரணம் எனக்குத் தெரியுமென்று பன்னிப் பன்னிச் சொல்வதின் அர்த்தமென்ன?" என்று கேட்டாள்.

ரங்கன் :—காரணம் உனக்குத் தெரியாதென்றால் நீ கிருஷ்ணனிடம் பத்து தினங்களுக்குமுன் என்னைப் பற்றி என்ன சொன்னாய்?

லீலாவதி :—நானு! கிருஷ்ணனிடமா!! உங்களைப்பற்றியா!!! என்ன சொன்னேன்? என்று வெகு ஆச்சரியத்துடன் கேட்டாள்.

ரங்கன் :—இவ்வளவு ஜல்தியில் நீ இவ்விஷயத்தை மறந்திருக்க முடியாது.

லீலாவதி :—நான் அவரிடம் உங்களைப்பற்றி எப்போதும் ஒரு வார்த்தையாவது பேசியது கிடையாது. இப்போதாவது அவர் என்ன சொன்னார் என்று சொல்லமாட்டீர்களா?

(இச்சந்தர்ப்பத்தில் ரங்கன் மனதில் பலவித குழப்பங்களுண்டாயின என்று நாம் சொல்லவேண்டியதில்லே.)

ரங்கன் :—நீ சொல்லச்சொல்லாவிட்டால் அவர் என்னிடம் அம்மாதிரி சொல்லவேண்டிய பிரமேயமே இல்லே. நீயோ என்னைப்பற்றி ஒரு வார்த்தை கூடப்பேசியது கிடையாது என்கிறாய். நீ என்னிடம் தெரிவிக்கும்படி கிருஷ்ணனிடம் ஒரு சமாசாரமும் சொல்லவில்லேயா?

லீலாவதி :—பிரதிதினமும் உங்களை நேரில் பார்க்கும்போது, நான் என் மூன்றாவது அன்னிய மனிதனாகிய கிருஷ்ணனிடம் சொல்லி அனுப்பவேண்டும்?

ரங்கன்:—வாஸ்தவந்தான்! ஆனால் நேரில் சொல்லக்கூடாத விஷயமா யிருந்தால்.........

லீலாவதி :—நான் இவ்வளவு சொல்லியும் நீங்கள் என்னை நம்பாமல் பழைய கதையையே வளைத்து வளைத்துப் பேசுகிறீர்களே யன்றி அவர் நான் சொன்னதாக என்ன சொன்னார் என்று சொல்லவில்லையே?

என்று சற்று கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

பெண்களின் கண் துடைப்பு எத்தனையோ பேர்களுக்கு உயிர் துடிப்பாக முடிந்திருக்கிறது என்பதை நீங்கள் அறிவீர்களாதலால், ரங்கன் தனக்கும் தன் நண்பன் கிருஷ்ணனுக்கும் நடந்த சம்பாஷணையை ஆதியோடந்தமாய் லீலாவதியிடம் ஒப்புவித்ததற்காக ஆச்சரியப்படமாட்டீர்கள்.

ஃ

லீலாவதி யாவற்றையும் பொறுமையாய்க் கேட்டுவிட்டு, "நீங்கள் எல்லாம் உண்மையென்று நம்பிவிட்டீர்களல்லவா? ஆம்: நம்பியதால்தான் இத்தனை நாட்கள் இங்கு வரவில்லை. என் பர்த்தாவை அன்று வழியில் சந்தித்தபோதுகூட அவரிடம் பேசாமல் ஏதோ சாக்குச் சொல்லிவிட்டுப் போய்விட்டீர்களாம். கிருஷ்ணன் என்மீதில் இம்மாதிரி அபாண்டமாய் சொல்லக் காரணமென்ன? நம்மிருவரையும் எவ்விதமேனும் பிரித்துவிடத்தான் இச்சூழ்ச்சி செய்தாற்போலிருக்கிறது" என்றாள்.

ரங்கன் :—நீ சொல்லாமலிருந்தது உண்மையாகில், நான் இப்போதே அவரிடம் போய்க் கேட்டு, அவர் என்ன சமாதானம் சொல்கிறார் என்று தெரிந்துகொள்கிறேன்.. அதுதான் நல்லது.

லீலாவதி :—"உண்மையாகில்" என்று நீங்கள் சொல்வது எனக்கு எவ்வளவு வருத்தத்தைக் கொடுக்கிறதென்று தெரிந்தால் நீங்கள் இம்மாதிரி என் மனம் நோகும்படி பேசமாட்டீர்கள். அவரிடம் நாம் இவ்விஷயத்தைக் குறித்துப் பேசாமலிருப்பதே நல்லது. மேலும், உங்களை இங்கு வராமலிருக்க சதி செய்ததற்கு அவர் எதிரிலேயே நீங்கள் தினம் இருமுறை வந்துபோவதுதான் அவருக்குச் சரியான தண்டனையாகும். சில மாதங்களாக என்னைப் பற்றி இவ்வூரில் உலாவும் அபாண்டச் சொற்களுக்கு அவரும் ஒரு காரண கர்த்தா என்பதை நாம் கவனிக்க வேண்டும். இப்போது நீங்கள் இவ்விஷயத்தைக் குறித்து அவரிடம் கேட்டால் அவர் அதைக்கொண்டு என்னென்ன கதைகட்டிவிடுவாரோ?

தன் நண்பன் கிருஷ்ணன் அற்பபுத்தியுடன் நடந்து கொண்டதாக எண்ணிய புத்திசாலியாகிய ரங்கன் லீலாவதியின் சொற்படியே தினம் இருமுறை அவள் வீட்டிற்குத் தாராளமாய்ப் போய்வர ஆரம்பித்தான்.

ஃ

மேற்கூறிய சம்பவங்கள் நிகழ்ந்த பின்னரும் நண்பர்கள் அன்யோன்யமா யிருந்தார்கள். ; ஆனால்

---

தோல்வி மிகவும் பெரிதாக இருக்கையிலே, அந்த சமயம்—நாசத்தின் ஆழத்திலிருந்து புதிய உயிரை எழுப்புகிற வலிமையைத் தனக்குக் கொண்டு வந்து தருகிற சக்தியினிடம்—ஒரு ஜாதி நம்பிக்கை யிழக்கும்போது, அதற்கு மனுஷ்ய வாழ்க்கையிலேயே நிராசை தோன்றிவிடும்.

இருவரும் தமக்குள் பேசித் தீர்மானித்துக் கொண்டதைப்போல் லீலாவதியைப்பற்றிப் பேசுவதே கிடையாது. கிருஷ்ணனுக்கு, ரங்கன் லீலாவதியின் வீட்டிற்கு அடிக்கடி போவதும், அவன் அவனுக்காக விசேஷமாய் சிற்றுண்டிகள் ஹோட்டலிலிருந்து வரவழைத்துக் கொடுப்பதும், அவர்களிருவரும் இருக்கும் அன்யோன்யத்தைக் குறித்தும், பலர் பலவிதம் பேசும்போதெல்லாம் அவன் மனதில் பலவித எண்ணங்கள் தோன்றியதன்றி, இதில் ஏதோ சூழ்ச்சியிருக்கிறதென்று தெளிவாய் விளங்கிற்று. தன் நண்பன் அதைப்பற்றி ஒரு வார்த்தையாவது பேசாமலிருக்க தான் எப்படிக் கேட்பதென்று இருந்துவிட்டான். நிற்க,

அடிக்கடி லீலாவதியின் வீட்டிற்குப் போய் வரும் ரங்கனுக்கு ஊரில் அவளைக் குறித்து உலாவும் பல வதந்திகளிற் சில உண்மையென்று சந்தேகிக்கும்படியான விஷயங்களைக் காண நேரிட்டது. ரங்கனுக்கும் போலிக்கல்லின் ஒளி மங்குவது புலப்பட்டது. இச்சந்தர்ப்பத்தில் நண்பர்களிருவரும் அவ்வூரை விட்டு அயலூர் செல்ல நேரிட்டது.

ஃ

நண்பர்கள் ஊரைவிட்டு வந்து சில மாதங்களாயின. வளர்பிறைச் சந்திரனைப்போல் நாளுக்கு நாள் வளர்ந்துவரும் அவர்களின் நேசமுதிர்ச்சியினால் ஒருவருக்குத் தெரிந்த ரகசியம் மற்றவருக்கு உடனே தெரிவிக்கும் நிலைக்கு இப்போது வந்திருப்பதால் லீலாவதியின் சதி இருவருக்கும் வெட்டவெளிச்சமாகிவிட்டது. "நாம் இவ்வளவு புத்திசாலிகளாயிருந்தும் நம்மைச் சில நாட்களாக சூத்திரப் பாவைகளைப்போல் ஆட்டிவைத்த லீலாவதியின் சதிகளை அறியாமற் போனோமே" என்று இருவரும் அடிக்கடி பேசிக்கொள்கிறார்கள்.

ஃ

நண்பர்களிருவரும் லீலாவதியின் சரித்திரம் முழுவதும் ஊரார் அறியும்படி செய்யவேண்டுமென்று என்னிடம் அவள் சரிதை முழுவதையும் சொல்லி எழுதச் சொன்னார்கள். ஆனால், லீலாவதியின் பர்த்தா நிரபராதியாகையால் அவர் மனம் சஞ்சலமடையும் என்பதை உத்தேசித்து, நான் இவர்கள் இருவர் சம்பந்தப்பட்டவரையில் எழுதுவதாயும், மற்ற விஷயங்களைக் குறிப்பிடுவது நன்றாயிராது என்றும் அவர்களைச் சமாதானம் செய்து இச்சிறு கதையை உங்களுக்குச் சமர்ப்பிக்க முன்வந்ததன்றி, லீலாவதியைப்போல் நடந்தால் "மானமழிந்து மதிகெட்டு" விட நேரிடுமென்று சகோதரிகளுக்கு எச்சரிக்கை செய்வதுடன், அனுவசியமாய் ஸ்திரீகளுடன் சகவாசம் செய்யாமலிருந்தால் 'வெள்ளம் வருமுன் அணை போட்டதற்கொப்பாகும்' என்று சகோதரர்களுக்கும் தெரிவித்துக்கொள்கிறேன்.



---

பிறருடைய அனுமதியன்றியில் தபாலாபீசுக்குச் சென்று அவர்களுடைய தபால்களை வாங்கி வருவது பெரிய பிழையாகும். அந்தத் தபால்களை அதற்குரியவர்களிடமே கொடுத்தாலுங்கூட, அவ்விதம் வாங்கி வந்ததற்கு அவர்கள் உள்ளுக்குள் வருத்தமே கொள்வார்கள். தங்களுக்கு வருகிற தபால்களில் பல ரகசியங்களும், தங்களின் ஜீவன மர்மங்களும் இருக்குமாதலின், தங்களின் தபால்களைப் பிறர் அறிவதற்கு எவரும் இடம்கொடார் சம்மதியார்.




# இராஜ சந்திரன்



(691-ம் பக்கத் தொடர்ச்சி.)

## XVIII.

குற்றவாளிதான் என்று தலைமை ஜூரி கூறியதும், பொன்னுசாமியின் கண்களினின்றும் நீர்த்துளிகள் ததும்பின. அப்போது தலைமை ஜூரி நியாயாதிபதியை நோக்கி, இந்தப் பொன்னுசாமி குற்றவாளியான போதிலும், இவனுக்குத் தாங்கள் சிறிது கருணை காட்டவேண்டுமென்றார்.

"ஏன்?" என்று நியாயாதிபதி கேட்டார்.

—"ஏனெனில், இவன் குமாரசாமியைக் கொல்லவேண்டுமெனமுன்னதாக யோசித்துக்கொண்டு அவ்விடத்திற்கு வரவில்லை. சந்தர்ப்பம் அவ்வாறு நேர்ந்துவிட்டது. கோபத்தையடக்க முடியாமல் திடீரென்று சுட்டுவிட்டிருப்பானென்று நாங்கள் கருதுகிறோம்"—என்று ஜூரிகளின் தலைவர் கூறினர்.

அப்போது நியாயாதிபதி பொன்னுசாமியை நோக்கி, குற்றவாளியே, உன்மீது ஏற்படுத்தியிருக்கும் குற்றத்தினைத் தடுக்க நீ ஏதாவது கூறப் போகிறாயாவென்று கேட்டார். பொன்னுசாமி மெல்லிய அழுகைக்குரலுடன் தர்மதுரையவர்களே! ஓர் விண்ணப்பம் செய்து கொள்கிறேன். ஜூரிகள் கூறியபடி குமாரசாமியைக் கொலை செய்வதற்காக நான் போகவேயில்லை. எவ்வித விரோதமும் அவர்மேல் எனக்கு இல்லை. அவர் என்னையழைத்துக் கடுகடுத்துத் திட்டி அடிக்கவும் வந்தார். நான் கோபத்துடன் அவருக்கருகேயிருந்த துப்பாக்கியை எடுத்து அவருக்குப் பயமுறுத்திவிட்டுத் தப்பித்துக்கொண்டோட எண்ணி அவர் எதிரே பிடித்தேன். திடீரெனக் குண்டு வெளிப்பட்டு விடவும் குமாரசாமிப் பிணமாய்க் கீழேவிழுந்தார். நான் அவரைக்கொல்ல நினைக்காவிடினும் திடீரென அவ்வாறு நடந்தபடியால் எனக்குக் கருணைகாட்டும்படி கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன் என்றான்.

ஃ

அப்பொழுது நியாயாதிபதி அவனை நோக்கி, "குற்றவாளியே! நீ குற்றமற்ற குமாரசாமி முதலியாரைச் சுட்டுக் கொன்றதற்காகச் சட்டப்படி தண்டனைக்குள்ளாகக் கடமைப்பட்டிருக்கிறாய். நீ அவருடைய பெண்ணாகிய அபிராமியைக் காதலித்து, அவரைக் கொன்ற பின்னராவது அவளை மணந்து வாழாமல் அவளை யழைத்துக்கொண்டு ஊர் ஊராய்த்திரிந்து அவள் ஜென்மத்தையும் வீணாக்கிக் கெடுத்துவிட்டாய். நீ

செய்த குற்றத்திற்காக, குற்றமற்ற உத்தம வாலிபனான இராஜசந்திரனையும் துன்பத்திற்குள்ளாக்கினாய். நீ கொலை செய்துவிட்ட பிறகாவது நன்னடக்கையுடன் வாழாமல் அனேக கௌரவமிருந்த குடும்பத்துப் பெண்களையெல்லாம் உன் பாழாய்ப்போன அழகில் மயக்கிக் கெடுத்தும் துரோக செய்கையுடன் நடந்திருக்கிறாய். உன்னைப்போன்ற துஷ்டர்கள் ஒருபோதும் இருந்தார்களானால் உனக்கு மரண தண்டனையே விதிக்கலாமென்று நினைத்தேன். கற்றுணர்ந்த ஜூரிகள் உன் விஷயத்தில் கருணை வைக்கும்படி கேட்டுக்கொள்வதால், நானும் அதற்கு இணங்கி உனக்கு விதிக்க நினைத்த தூக்குத் தண்டனையை ஆயுள்முழுதும் தீபாந்திர சிக்ஷையாக மாற்றிவிட்டேன்" என்று தீர்ப்பைக் கூறிமுடித்தார்.

இதைக் கேட்டதும் பொன்னுசாமி கண்ணீர்விட்டழுதான்.

நியாயாதிபதி இராஜசந்திரனை விடுதலைசெய்து, இனி அன்னிய ஸ்திரீகளிடம் பழகாமலிருக்கும்படி புத்திமதி கூறினார். சீனிவாச முதலியார் தன் குமாரனைத் தழுவிக்கொண்டு ஆனந்தக் கண்ணீர்விட்டார்.

## அத்தியாயம்-16.

## தர்மமே ஜெயம்.



தர்ம பூஷணமாகிய சபாபதி முதலியார் தமது அந்தியகாலத்தில் இராஜசந்திரனை நினைத்துப் பிரலாபித்ததும், கமலவல்லியை இராஜசந்திரனின் சொத்தாக ஒப்புவித்துவிட்டிருந்தேன் என்று உள்ளங்கரைந்து கூறியதும் கண்ணப்பனின் மனத்தில் ஆழ்ந்து பதிந்தது. தனக்குப் பெண்ணும் பூமியும் தந்த தன் மாமனாரின் ஆத்மா சாந்தியடைவதற்காக எவ்விதமும் இராஜசந்திரனை விடுவிக்கப் பாடுபட வேண்டுமென்று உறுதி செய்து கொண்டிருந்தான். அதற்குப் பிறகே, கிருஷ்ணவேணி தன் தமயனை விடுவிப்பதற்குப் பிரயத்தனங்கள் செய்யுமாறு கண்ணப்பனை வேண்டினாள். கண்ணப்பனும் தனது அபாரமான மூளையின் உழைப்பால் இராஜசந்திரன் விடுதலையாகவே, இது சபாபதி முதலியாரின் ஆத்மாவுக்குத் திருப்தி தரும் என்று சந்தோஷித்து, அவரது படத்திற்கு அருகில் இராஜசந்திரனோடும் கமலவல்லியோடும் சென்று வணங்கினான். மூவரின் கண்களிலும் நீர் அருவிபோல் ஓடியது. சபாபதி முதலியாரின் படத்தை நன்கு அலங்கரித்து மகிழ்ந்தனர். என் தந்தைக்கு நீங்கள் நல்ல மாப்பிள்ளைதான் என்று கமலவல்லி கூறிக் கண்ணப்பனுக்கு ஒரு முத்தம் தந்தாள். இராஜசந்திரனும் கண்ணப்பனை யணைத்து மகிழ்ந்தான். ஃ

அபிராமி எவருக்கும் சொல்லிக் கொள்ளாமலே எங்கேயோ ஓடிவிட்டாள். கமலவல்லி இராஜசந்திரனுக்கு விவாகம் செய்விக்க வேண்டுமென்று சீனிவாச முதலியாரிடம் கூறினாள். விரைவில் தகுந்த இடத்தில் பெண் பார்த்து இராஜசந்திரனுக்குத் திருமணம் நிறைவேறியது. அதற்கு அடுத்த மாதம் கிருஷ்ணவேணிக்கு விவாகமாயிற்று. கமலவல்லியும் இனி கிருஷ்ணவேணி கண்ணப்பரை மயக்க முடியாதென்று உள்ளுக்குள் ஸந்தோஷித்துக்கொண்டாள். ஏனெனில், கிருஷ்ணவேணியால் கமல

வல்லி அடைந்த மனோசஞ்சலம் அதிகமன்றோ ?

ஃ

துஷ்டனாகிய பலராமன் பொன்னுசாமிக்கு நேரிட்ட கதியைக் கண்டு திருந்தி நல்வழியை யனுசரிக்கத் தொடங்கினான். அவனுக்கும் கமலவல்லி ஓரிடத்தில் பெண் பேசி விவாகத்தை நடப்பித்தாள். ஆதியில் கமலவல்லியைக் கொடுமைப்படுத்திய பலராமனுடைய தாயாகிய அத்தை இப்பொழுது கமலவல்லியிடம் மிக்க அன்பாக இருக்கிறாள். எத்தகையோரையும் காலசக்கரம் எப்படியோ திருத்தி விடுகிறது.

ஃ

இராமசாமி. எதிராஜன். லக்ஷ்மணசாமி தனபாலன் யாவரும் கண்ணப்பனோடு அந்நியோந்நியமாய் இருந்து வருகின்றனர். இராஜசந்திரன் இப்பொழுது துரைத்தனத்தில் ஒரு உயர்ந்த உத்தியோகத்தைப் பெற்று சுகமாக இல்வாழ்க்கையை நடத்திக் கொண்டிருக்கிறான். கண்ணப்பனின் தமக்கை சுகுணவதி ஞானபக்தி வைராக்கியங்களைக் கோரி பகவத் தியானத்துடன் சுகமே இருந்து வருகிறாள். சுபம்.

## இராஜசந்திரன் முற்றிற்று.

இது சீக்கிரம் இது தனிப் புஸ்தகமாக வெளிவரும். S. G. R.

---



சிலர் தங்களின் வீட்டுக்கு வந்தவர்களிடம் எவ்வளவு எதிர்த்துப் பேசுவதானாலும் பேசலாமென்று நினைத்துவிடுகிறார்கள். அவ்விதமே பேசி அலக்ஷியம் செய்து தங்களின் பெருமையைக் காண்பித்துக்கொள்கிறார்கள். அதோடு அவர்களின் வீட்டுக்கு அந்த மனிதர் வருவதும் நின்றுபோகிறது.

ஒவ்வொருவராலும் ஒவ்வொரு குடும்பம் பிழைக்கிறது. அந்த ஒருவர் கண்மூடினால், குடும்பமே உருக்குலைந்து வேறுபட்டுச் சின்னாபின்னமாகிறது. அந்த ஒருவர் மரித்ததும் அவ்வீட்டை யண்டி வாழ்ந்தவர்கள் உடனே பிரிந்து தனிக் குடித்தனமாய் வேறேயாகப் போக நேர்ந்துவிடுகிறது.

# ஓர் ரகசிய விவாகம்.

(589-ம் பக்கத் தொடர்ச்சி.)



சிறிய தம்பியான நவீன கோபாலன் தன் குமார்த்திக்கு விவாகமான விஷயத்தையே அறியவில்லை. பிரபல பிரம்ம ஸமாஜியா யிருந்தபோதிலும், தமயனைப்போன்ற அதிர்ஷ்டசாலியல்ல. தமயனுக்கு ஏராளமான சொத்துக்கள் இருந்தன. ஆனால், புத்திர பாக்கியமில்லை. நவீன கோபாலுக்கோ புத்திர பாக்கியமிருந்தது; ஐச்வரிய ராசிகள் அருமையாயின. எந்த உத்தியோகமும் நெடுநாள் நிலைக்கவில்லை. இடையிடையே ஒவ்வொரு வேலைக்கும் எவ்விதமோ விபத்துவந்து, அதுவரையில் உழைத்ததும் வீணாகி, புதுவேலை யொன்றைத் தேடிச் செல்லும்படியாகத் தலைவிதி வாய்த்தது. ஏற்கெனவே தனக்கு இருந்த பூர்வ சொத்துக்களையும் தன் தமயனுக்கு வறுமையின் கொடுமையால் விற்றுத் தொலைத்தானது. தபால் சேவிங் பாங்கியில் நாலணாவுக்கு மேல் இல்லை. வெளியில் எவ்வளவுதான் பிரக்யாதி விசேஷித்திருந்த போதிலும் தன்னை நம்பிய மனைவி மக்களுக்கும், இரண்டாவதாகத் தனது வயிற்றுக்கும் வேண்டிய ஸம்ரக்ஷணைச் செலவுகளுக்கு இந்தப் பிரசித்தியால் பணம் கிடைத்துவிடுகின்றதா? இல்லையென்பதே வெகு பேருடைய அபிப்பிராயம். எவ்வளவு கடன் வாங்க முடியுமோ அவ்வளவும் வாங்கியாயிற்று. நண்பர்களிடமெல்லாம் கடன் பெற்றானது. இதுவரையிருந்த ரயில் உத்தியோகமும் சிக்கனத்தை உத்தேசித்து ஆட்களைக் குறைத்த வகையில் தன் தலைக்கும் இடிவந்து விழுந்து தொலைந்தது. தமயனை ஒத்தாசை கேட்கவோ மனமில்லை. தமயனிடம் இருக்கும் பெண்ணைத் தன்னிடம் அழைத்து வைத்துக்கொள்ள எவ்வளவோ ஆசை. நன்றாக நெய்யும் பாலுமாகத் தமயனிடம் உண்டு வளர்ந்த குழந்தையைத் தரித்திராதேவி தாண்டவமாடும் தன் வீட்டிற்குத் தருவித்துக் கஷ்டப்படுத்த மனம் சம்மதிக்கவில்லை. தன் மனைவியும் எங்காவது குழந்தை சுகமாக இருந்தால்போதும் என்று கண்ணீர்விட்டது நவீன பாபுவின் நெஞ்சுக்கு வேதனையாக இருந்தது. தன் தமயன் தனக்கு எவ்வித துரோகமும் செய்யவில்லை. அது நிச்சயமான வார்த்தை. தனக்கு எவ்விடமாவது புது உத்தியோகம் தேடித் தரும்படி தன் தமயனைக் கேட்கலாம். அதில் அவமானம் ஒன்றுமில்லை. போவாமோ என்ன என்று நவீனபாபு ஒரு வாரமாக யோசித்தவாறு இருந்தான். கடைசியில் தன் குமார்த்தியைக் காணவேண்டுமென்ற ஆசை சகிக்கமுடியாததாகி விடவே,

---

அதிகமான அறிவு படைத்தவர்களை வீடும் வெறுக்கிறது. நண்பர்களும் வெறுக்கிறார்கள். ஊராரும் தூற்றுகின்றனர். இதன் காரணமென்ன? அந்த அதிக அறிவிலே தெளிவின்மையும், கபடமும் பொறாமையும் மிகுத்திருந்ததுமே காரணமாம். அத்துடன் பிறர் வாழ்வதில் நல்லெண்ண மில்லாமையும் சேர்ந்து கொண்டாலோ—தீயும் காற்றும் கூடியது போலத்தான்.

தன் மனைவியுடனும் தன் குமாரன் விமலநாதனுடனும் கல்கத்தாவுக்குப் புறப்படலானான்.

ஃ

இராம கோபாலபாபு தன் தம்பியை எதிர்கொண்டழைத்து, சிறு பிராயத்தில் விளையாடிக் குதூகலித்த வாறுபோல் அன்பு பாராட்டி, எல்லாம் உன் வீடு, எல்லாம் உன் சொத்து, நான் உன் கூலிக்காரன்தானப்பா என்றார். தன் பெட்டிச்சாவிகளைத் தம்பியின் கையில் கொடுத்து உனக்கு இஷ்டமானவைகளை எடுத்துக்கொள் என்றார். நவீனபாபுவுக்குத் தன் தமயனின் அன்பு பிரம்மானந்தமாயிருந்தது. "அன்புள்ள அண்ணா! பெட்டிச் சாவிகளை உன்னிடமே வைத்துக்கொள். நீ பிராணனோடு இருக்கிற வரையில் அது உன்னிடமே இருக்கவேண்டும். நான் வெறுமனே உட்கார்ந்து சோம்பேறியாய்ப் புசிப்பவனல்லவென்று நீ அறிவாய். என் குடும்பத்தை நானே பொருள்தேடி ஸம்ரக்ஷிக்கும்படி ஏதாவது ஒரு வேலைக்கு சிபாரிசு செய்துவை. எனக்குக் கடன்கள் 500-ரூபா வரையில் இருக்கின்றது. அதை தர்மமாக எனக்குக் கொடுக்கவேண்டும். பிரிய புத்திரி ஸ்வர்ணலதா லாவண்யமயியாய் லக்ஷ்மீதேவி போன்றும் சோபிக்கின்றாள். சீக்கிரம் விவாகம் நடக்கவேண்டும். வரனை நான் தேடி வருகிறவரை நீங்கள் சற்று பொறுக்கவேண்டும்" என்றான். கோபாலபாபு உன் பிரியப்படி நடக்கிறேன் என்று உரைத்து அந்த நிமிஷமே ஆயிரம் ரூபா நோட்டு ஒன்றைத் தம்பியினிடம் கொடுத்தார். நவீனபாபு வணக்கத்துடன் பெற்றுக்கொண்டான். பாரிஸால் நகரிலுள்ள தமது நண்பருக்கு ஒரு சிபாரிசு கடிதமும் கொடுத்தார். நவீனபாபு ஒரு வாரம் வரையில் தன் தமையனார் வீட்டிலிருந்து தன் குமார்த்தியுடன் கொஞ்சிக் குலாவி மகிழ்ந்தவனாய் தன்மனைவி நிர்மலாவையும், குமாரன் விமலநாதனையும் அங்கேயே விட்டுவிட்டுப் பாரிஸாலுக்குப் புறப்பட்டுச் சென்றான்.

ஃ

ஸ்வர்ணலதா தனக்கு விவாகம் நடந்து ஆறுவருஷங்களாகியிருந்தும், தன் தந்தையான நவீன பாபுவிடம் அதை வெளியிடாமல் ஸமத்காரமாக நடந்துகொண்டாள். ஸதா தன் கழுத்தை நன்றாக மூடியவண்ணமாக இருந்தாள். பெற்ற குமார்த்தியானாலும் அவளுடைய ஜால ஸாகசங்களைத் தந்தையாலுங்கூடக் கண்டுகொள்ள முடிகிறதில்லை. ஆனால், ஈன்ற அன்னையை இவ்விதம் ஏமாற்ற முடியுமோ? சுந்தரிகள் ஒருவரை யொருவர் சந்திக்கும்பொழுது, கழுத்திலுள்ள ஆபரணங்களையே விசேஷமாகக் கவனிப்பதும், அதைப் பற்றிப் பேசுவதும் வழக்கம். சற்று மறைவாகக் கழுத்தில் ஒரு ஆபரணமிருப்பின் அதைத் தொட்டுப் பார்க்கவும், அங்கு கை வைத்தெடுக்கவும் ரமணிகட்குக் கடவுள் ஸ்வதந்திரம் கொடுத்திருக்கின்றார். ஆகவே, நிர்மலாதேவி தான் வந்த தினமே தன் குமார்த்தி ஸ்வர்ணலதாவின் கழுத்தில் மாங்கல்யமிருப்பதைக் கண்டறிந்துகொண்டாள். தன் பர்த்தாவின் ஸ்வபாவத்தை நன்கறிந்தவளாதலின் பிரமாத கலகம் உண்டாகுமென்று வெளியிடாமல் மறைத்துவிட்டாள்.

---

தன் தாய் தந்தையரின் மீது கோபங்கொண்ட ஒருவன் அவர்களுக்கு ஒரு சங்கதியை எட்டவைக்க வேண்டுமானால், பக்கத்துக்கு வீட்டுக்காரனுக்கு சிறிது கூறிவிட்டால் போதும். அவன் மூலமாக உடனே எல்லோருக்கும் எட்டி விடும்.

எவ்விதமோ தன் புத்திரிக்கு விவாக மாகிவிட்டதற்கு மகிழ்ந்து கோபால பாபுவை மனதார வாழ்த்தினன்.

ஃ

பாரிஸாலுக்குச் சென்ற நவீன பாபு சிபாரிசு கடிதத்தின் உதவியால் கலெக்டர் கச்சேரியில் 60-ரூபாய் சம்பளத்தில் ஒரு குமாஸ்தா வேலையில் அமர்ந்தான். எப்பொழுதுமே நன்கு உழைப்பவனாதலின் மேலதிகாரிகளுக்கு அவன்மீது ஒரு அபிமானம் ஏற்பட்டது. அவன் பெரிய பிரம்ம ஸமாஜி என்பதையறிந்த கலெக்டர் அடிக்கடி அவனைத் தருவித்து அவனுடைய கொள்கைகளைப்பற்றி ஸம்பாஷணை செய்துவந்தார். ஒருதினம் கலெக்டர் பின்வருமாறு கூறினர். "எனக்குப் பிரமஸமாஜத்தின் கொள்கைகளில் விசேஷப் பற்றுதல் ஏற்பட்டிருக்கின்றது. அப்படியாக ஒரு ஸமாஜம் இருக்கத்தான் வேண்டும். அது அந்தமதத்திலுள்ள பலவகைப் பிரிவினைகளையும் ஸமரசப்படுத்த உதவும். எனினும். பிரம்ம ஸமாஜத்துள் புகுந்து, நாற்காலியில் உட்கார்ந்தவாறு ஸர்வ வியாபியாயுள்ள பரமாத்மாவை எட்டிப் பிடித்து மனத்தால் தியானிக்க என்னல் முடியவில்லை. அவ்வளவுக்குப் போதிய ஞான பக்குவம் இன்னும் எனக்கு ஏற்படவில்லை. அது மகான்களால்தான் ஆகக்கூடிய காரியம். வயோதிகத்திலே நன்ருக ஞானத்தில் பழுத்தபின்செய்யவேண்டிய விஷயம். இப்போதைய தகுதியற்ற நிலையில் வெளிப் பெருமைக்காக பிரம்ம சமாஜத்தின் நாற்காலியில் உட்கார்ந்து தியானிப்பதுபோல் நடிப்பது எனக்குப் பிடிக்கவில்லை. நான் லண்டனிலுள்ள பிரம்ம சமாஜத்தில் சேர்ந்து அங்கிருந்தபடி தியானிப்பது என் சிறு சக்திக்கு மீறியதென்று கண்டு விலகிவிட்டேன். விக்கிரகாராதனையே தக்கது. கடவுளின் உருவமாக ஒன்றைப் பாவித்து வணங்கிப் பக்குவமுற்று. அதன்பின் பிரம்மஸமாஜக் கொள்கைகளை நாளடைவில் ஏற்பதே தக்கதென்பது என் அபிப்பிராயம்" என்ருர்.

ஃ

நவீன பாபுவுக்குக் கலெக்டர் கூறிய அபிப்பிராயங்கள் மனதுக்கு ஹிதகரமாயிருந்தன. பிரம்மஸமாஜக் கொள்கைகள் உன்னதமுடையவைகளேயாயினும், அதன்படி நடக்கத் தன்னாலும் கூடாமலிருப்பதையும், எங்கும் நிறைந்த இறைவனை மனக்கண் கொண்டு. கண்டு துதிக்க மனதுக்கு சக்தியின்றி யிருப்பதையும். விக்கிரகாராதனை முறையில் மனத்தை ஓரிடத்தில் நிலை நிறுத்தப் பல வழிகளை மகரிஷிகள் ஏற்படுத்தியிருப்பதையும் தன் மனதுக்குள் நெடுகச் சிந்தித்து வந்தான். கலெக்டர் அடிக்கடி அவனை அழைத்துப் பேசி அவனது புத்தியைத் திருத்திக் கொண்டு வந்தார். ஒரு தினம் இருவரும் கல்கத்தாவிலுள்ள மஹாதேவியின் ஆலயத்திற்குச் சென்றனர். காளி மாதாவின் உருவம் நவீன பாபுவுக்குப் பக்திமயமாக இருந்தது. அவன் மனமும் அந்தத் தரிசனத்தில் ஆழ்ந்து பதிந்தது. அப்படியே தனது தமையனையும் பார்த்துப் போக எண்ணி ராமகோபாலின் வீட்டிற்கு வந்தான். அவனுடன் வந்த கலெக்டரை ராமகோபாலபாபு மிக்க கௌர

---

பழைய நண்பர்கள் கண்டும் காணுதவர்களாகச் செல்ல ஆரம்பிப்பதில், பிறகு ஒரு சமயத்திலே நேருக்கு நேராகத் தப்ப முடியாமல் சந்தித்துக்கொள்ளும்போது தங்களின் மன அழுக்கை முகத்தில் காண்பித்துக்கொண்டு விடுகிருர்கள். அவர்களின் முகமும் நாணிக்கோணி மாறி சிறுத்துப்போகிறது.

வமாக வரவேற்றார். தனது தந்தை வந்திருப்பதைக் கேட்ட ஸ்வர்ணலதா மிக்க ஆவலுடன் இவர்களின் அறைக்குள் நுழைந்து, அங்கு புதிய மனிதரொருவர் இருக்கவே நாணத்துடன் ஓடிவிட்டாள். பிறகு நவீனபாபு வீட்டிற்குள் சென்று தன் புத்திரி, மனைவி, குமாரன் இவர்களோடும் அன்புகுலாவிப் பேசிவிட்டுத் தன் அதிகாரியுடன் பாரிஸாலுக்குச் சென்றான்.

ஃ

கலெக்டர் ஸ்வர்ணலதாவைச் சந்தித்ததை மறக்க முடியவில்லை. நவீனபாபுவின் குல பரம்பரைகளை விசாரித்துவிட்டு, அந்த யுவதி யாருடைய குமார்த்தி என்று கேட்டார். நவீனபாபு தன் புத்திரி என்று கூறினான். பிறகு விவாக விஷயங்களைப்பற்றிப் பிரஸ்தாபம் நடந்து, கலெக்டர் தமது காதல்விருப்பத்தையும் தெரிவித்தார். நவீனபாபுவுக்குப் பரம ஸந்தோஷம் உண்டாகிவிட்டது. பிரம்மஸமாஜத்திலிருந்தும் விலகுவதானால் உன் புத்திரியை மணந்துகொள்கிறேனென்று கலெக்டர் கூறினார். அதற்கு நவீனபாபு சற்று யோசித்தவனாய், கடைசியில் பிரம்மஸமாஜத்தை விட்டுவிட ஒப்புக்கொண்டு, தன் தமயனாரிடம் வந்து தன் புத்திரிக்குத் தகுந்த இடத்தில் வரன் தேடி இருப்பதைத் தெரிவித்தான். ராமகோபாலபாபு திகைத்தவராய் உன் மனைவியின் ஸம்மதம் கிடைத்தால் செய்யலாம் என்றார். வீட்டிற்குள் சென்று தன் மனைவியின் ஸம்மதம் கேட்க, அவள் இந்த விவாகத்திற்கு ஒப்பவில்லை. ஸ்வர்ணலதாவும் பூரணமாய் மறுத்துவிட்டாள். நவீனகோபாலுக்குக் கோபம் பொங்கியது. தமயனிடம் வந்து ஸ்வர்ணலதாவுக்கும் கலெக்டருக்கும் விவாகம் செய்விக்கப் போவதாகவும், அதற்கு அவர் தடை சொல்லக்கூடாதென்றும் தெரிவித்தான். "உன் இஷ்டப்படி செய்; நான் உனக்கு விரோதமாக நிற்பதில்லை" யென்று கோபாலபாபு கூறினார். இது நவீனபாபுவுக்குத் திருப்தியாயிருந்தது. கோபாலபாபு புரோகிதரான தர்க்காலங்கார சாஸ்திரிகளைத் தருவித்து விவாகத்திற்கு நாள் குறிக்கும்படி நவின்றார். அவரும் பத்து தினங்கட்குப் பிறகு ஒரு முகூர்த்தம் இருக்கிறதென்று தெரிவித்தார். கோபாலபாபு தான் விவாகச் செலவுகளை ஏற்றுக்கொள்வதாயும், தாமே விவாகத்தை நடத்திவைப்பதாயும், எப்போதும் உன் தமயன் உன்மீது அன்புடையவனே யென்றும் புகன்று நல்ல வார்த்தைகளால் தன் தம்பியின் மனத்தைக் களிப்புறச் செய்வித்தார். நவீனபாபு தன் மனைவியிடமும் புத்திரியிடமும் சொல்லிக்கொள்ளாமலே கோபத்துடன் பாரிஸாலுக்குப் புறப்பட்டுச் சென்றான்.

ஃ

தன் தந்தை வண்டி யேறிச் சென்ற மறுநிமிஷமே ஸ்வர்ணலதா கோபாலபாபுவின் அறைக்குள் ஆத்திரத்துடன் நுழைந்தாள். "எப்படி நீங்கள் மற்றொரு விவாகத்திற்கு சம்மதிக்கலாம்?" என்று கண்ணீருடனும் கேட்டாள். "உன் பழய மாங்கல்யத்தைக் கழற்றிவிட்டு, அதையே புதிதாய் மெருகிட்டு மறுபடியும் இந்தப் புதிய விவாகத்தில் தரித்துக்

ஒருவன் சிரித்துக்கொண்டு பேச வரும்பொழுது, அவன் ராங்கியாய் முறைப்பாய் அலக்ஷியமாய் முன்பு இருந்ததையும், ஏசியதையும், அவன் செய்த மோசங்களையும் நினைத்துக்கொள். அப்பொழுது நீ ஏமாறாதபடி எச்சரிக்கை கொள்ளமுடியும்.

கொள்" என்றார். அதற்கு ஸ்வர்ணலதா "இதற்கு நான் ஒப்பமாட்டேன். பிராணத்தியாகம் செய்வேன்" என்றாள். "நரேந்திரன் இப்போது எங்கு இருக்கிறானோ தெரியவில்லையே என் செய்வது?" என்று கோபாலபாபு கூறினார். "தந்தாய்! என்னைச் சோதிக்க வேண்டாம். விவாகமான எழு வருஷங்களுக்குப் பிறகு என் பர்த்தாவை அன்று தங்களின் அறையிற் கண்டுபிடித்துவிட்டேன்; அந்த தரிசனத்தை நான் மறக்க முடியாது; வேறெவரும் என்னைத் தொடக்கூடாது" என்று ஸ்வர்ணலதா அழுதுகொண்டே சொன்னாள். "ஹா! உன் நரேந்திரனை உன் திருட்டுக் கண்கள் கண்டு பிடித்துவிட்டதா? இத்தனை வருஷங்கட்குப் பிறகும் அவனை அறிந்து கொண்டாயா? அவன்தான் இப்போது கலெக்டராய் இருக்கிறான். அவன் உன் தந்தையின் மனத்தை மாற்றி பிரம்மசமாஜத்திலிருந்து விலகச் செய்துவிட்டான். முன்பு நடந்த விவாகம் ரகசியமாகவே என் காலமுள்ளவரையில் இருந்துவிடட்டும். புது விவாகத்திற்கு நீ சம்மதித்துக் கொள். நமது பழைய புரோகிதரே இதையும் நடத்துவிப்பார். நான் உனக்குத் துரோகம் செய்யவில்லை. உன் தந்தைக்குப் பழைய விஷயங்களைத் தெரிவிக்கவேண்டாம்" என்று கோபாலபாபு கூறவே, ஸ்வர்ணலதா அத்யந்த பரவசத்துடன் தன் பெரிய பிதாவை நமஸ்கரித்தாள். திகைப்புடன் நின்ற அன்னை நிர்மலாவும் இவற்றைக்கேட்டு ஆநந்திதையானாள்.

ஃ

இனி பழைய கதையைச் சிறிது கூறுவோம். அலகாபாத்தில் வாசித்து வந்த நரேந்திரன் பரீக்ஷைகளில் உயர்தரமாய்த் தேறியபின் கோபாலபாபு அவனைக் கலெக்டர் பரீக்ஷைக்குப் படிக்க இங்கிலாந்துக்கு அனுப்பி வைத்தார். புத்திசாலியான நரேந்திரன் அங்கும் பரீக்ஷையில் தேறித் திரும்பி, முதலில் ஸப்கலெக்டராகி, பின் பாரிஸாலில் கலெக்டராக அமர்ந்தான். கோபாலபாபு தன் தம்பிக்கு அவனிடமே சிபாரிசு கடிதம் கொடுத்தனுப்பினார். நரேந்திரன் தன் மாமனை யறிந்து, மெதுவாக பிரம்மசமாஜத்திலிருந்தும் அவன் மனத்தைப் பிரித்துத் தன் வழிபடுத்தினான். ஸ்வர்ணலதாவை எழு வருஷங்கட்குப்பின் அன்று அந்த அறையிற் கண்டதும் நரேந்திரன் பிரமித்தான். அந்த சந்திப்புச் சுகம் எப்படிப் பட்டதோ, அனுபவித்தவரே அறிவார்.

ஃ

நவீனபாபு நரேந்திரனுடனும் அவன் பந்துக்களுடனும் விவாகத்திற்கு வந்து சேர்ந்தான். நரேந்திரனும் ஸ்வர்ணலதாவும் புது விவாகத்தால் ஒன்றுகூடினர். நவீனபாபுவுக்கும் பரம ஸந்தோஷமுண்டாயிற்று. முந்திய ரகசிய விவாகம் வெளிக்கு வராத ரகசியமாகவே இருந்துவிட்டதற்குக் கோபாலபாபுவும் தர்க்காலங்காரரும் மிக்க மகிழ்ந்தனர். நிர்மலா, ஸ்வர்ணலதா—இவர்களின் பூரிப்பு சொல்லவுங் கூடுமோ!



---

நமது தேசத்திற்கு நாம் செலுத்தும் மதிப்பைக்காட்டிலும், அன்னியர் அதிக மதிப்பு செலுத்தவேண்டுமென்று விரும்புதலும் முயற்சிசெய்தலும் நாம் செலுத்தும் மதிப்பைக் குறைத்துக்கொள்வதுபோலாம். முதலில் நமது மதிப்பு உயர்ந்திருக்கவேண்டும். மற்றவர் மதிப்பை அதற்கு இரண்டாவதாக அமைக்கவேண்டும்.

# சித்திர விநோதங்கள்.



பிரஸிடென்ஸி மாஜிஸ்திரேட் முன்பாக குது வினை தெரியாத ஒரு கிழவி தன் வக்கீலுடன் ஆஜராகி, தன்னைத் தாக்கிய சில வாலிபர்களுக்கு சம்மன்ஸ் அனுப்புவித்து விசாரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டாள். மாஜிஸ்திரேட் அந்த வாலிபர்களின் வயது என்ன வென்று கேட்க, கிழவி அதோ நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் தடித்த அய்யாவைப்போல் இருப்பார்கள் என்றாள். மாஜிஸ்திரேட் வெட்கித் தலைகுனிந்து சிரித்துக்கொண்டு வேறு கேள்வி கேட்காமல், கிழவியின் இஷ்டப்படியே குற்றம் செய்தவர்களுக்கு சம்மன்ஸ் அனுப்பினார்.

ஃ

தாயார் :—நேற்றுவந்த சிறுக்கிக்காகப் பரிந்து பேச வந்துவிட்டாயோ? எப்போது அந்த முண்டை வந்தாளோ அன்றைக்கே உன்னை அவளுக்கு ஒப்புவித்துவிட்டேனே! நீ அவள் மனுஷ்யனே தவிர, என் மனுஷனல்லவே! என்னை மாமியென்று கொஞ்சமாவது மனதில் மதித்தாளா? மரியாதை வைத்தாளா?



மனைவி :—உங்களோடு நான் வாழ்ந்த வாழ்வு போதும். இனி இந்த வீட்டில் இருக்கமாட்டேன். என் தாய் வீட்டுக்கு அனுப்பிவிடுங்கள். நீங்களும் உங்கள் தாயாரும் சௌக்கியமாயிருங்கள். என்னால் இந்தக் கேவலங்களும் திட்டுகளும் கேட்க முடியாது. வீட்டுக்குள் வருகிறவர்களிடமெல்லாம் என்னைக் கேவலப்படுத்திப் பழித்துப் பேசுகிறதா?

ஃ



தாதா :—பழய வேஷ்டிகளும், பணமும் வைத்திருந்த என் மூட்டையைக் காணோமே. அன்னியர் எவராவது உள்ளே வந்து கொண்டு போய் விட்டார்களோ?

விருந்தாளி :—புதிதாக எவரும் வரவில்லை. உங்கள் பேரப்பிள்ளைகள்தான் அந்த மூட்டையை எடுத்துத் தென்னமரத்தின் கிளையில் கட்டியிருக்கிறார்கள். இதோ பாரும்!

| | | |
|---|---|---|
| விசேஷம்<br>விநோதம்<br>விசித்திரம்<br>வேடிக்கை |  | அநுபவம்<br>அற்புதம்<br>ஆச்சரியம்<br>ஆநந்தம் |



# நீயென்னடி உயர்த்தி?
# நானென்னடி தாழ்த்தி?



நமது மஹா விகடன் இரண்டு பெண்டாட்டிக்காரன் கதையைச் சொல்லவந்தானாக்கும்; அதிலே மூத்தவளும் இளையாளும் தங்களுக்குள் நேர்ந்துகொள்ளுகிற சண்டையிலே, "நீ யென்னடி உயர்த்தி, நானென்னடி தாழ்த்தி" என்று டீ கொடுத்து முட்டி மோதிக்கொள்வதை அளக்க வந்தானாக்கும் என்று நினைத்துக்கொள்வீர்கள்! அப்படியல்ல; விகடன் பேசவந்த எத்தனையோ ஆயிரத்தில் அது ஒரு டீ தான். அந்த இளைய—மூத்த சண்டையிலும் இந்த உயர்த்தி தாழ்த்தியின் ராகத்தைக் கேட்கலாம் தான்! இப்போது எங்குமே ஒரே பேச்சாயிருக்கிற ஹரிஜனங்களின் கிளர்ச்சியிலே தீண்டாத வகுப்பு மாதர்கள் தாங்கள் உயர்ந்த ஜாதிக்கு உயர்த்தப்பட்டு விட்டதாக எண்ணிக்கொண்டு கிணற்றங்கரையில் ஜலம் சேந்தும்போது இவள் குடம் உயர்ந்த ஜாதிப் பெண்ணின் குடத்தின்மேல் மோத, அதற்கவள் கோபிக்க, இந்த தாழ்ந்த ஜாதிப்பெண்ணும் தன்னுடைய புதிய பிருது விடாமல், "நீயென்னடி உயர்த்தி, நானென்னடி தாழ்த்தி" என்று சண்டைக்குக் கிளம்பிவிடலாம்! பெரியவர்கள் பெரிய மேலான சிந்தையுடன் ஒரு சீர்திருத்தத்தைச் செய்ய முற்பட, அதன் உட்கருத்தை யறியாமல் தாங்கள் ஜாதியில் உயர்ந்துவிட்டதாய்ப் பிரதாபப்பட்டுக்கொண்டு ஆரவாரிப்பதும் உண்டு தான்! மேலான சகோதர எண்ணத்தோடும் ஹரிஜனங்களை நினைத்துச் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்ற கிளர்ச்சியே தவிர, ஜாதியில் உயர்த்துவதற்கு அவர்களைப் படைப்பித்த அந்தப் பிரம்மதேவன்தான் வரவேண்டும்! ஃ

இனி, இங்கிலீஷ் 1933-ம் வருஷமும், இப்போது பிறக்கப்போகிற தமிழ் ஸ்ரீமுக வருஷமும் "நீ என்னடி உயர்த்தி, நானென்னடி தாழ்த்தி" என்று கும்மா குத்துகள் விட்டுக்கொண்டு சண்டை பிடிக்கலாம்! ஓ! இங்கிலீஷ் ஜனவரி முதல் தேதி பிறந்ததென்றால், எவ்வளவோ ரோஜாப்பூ மாலைகளும் எலுமிச்சம் பழங்களும் எங்கெங்கும் தாண்டவமாடி ஒருவரையொருவர் கண்டுகொண்டு ஆசீர்திப்பார்களே; அந்தத்

தேதியிலே உனக்கென்னடி மகிமை யிருக்கிறது என்று இங்கிலீஷ் வருஷம் தமிழ் வருஷத்தைப் பார்த்துப் பழிக்கலாம்! அப்படியே தமிழ் வருஷமும், இங்கிலீஷ் வருஷத்தைப் பார்த்து, அடியே! அடியே! அடக்கடி சும்மா, நீ பிறந்துவிட்டாயென்று என் தமிழ் மக்கள் ஏதோ உன்னோடு பழகிப்போனதற்காக ஒரு பல் லிளிப்பு காட்டி ஏதோ ஒரு சந்தோஷ உணர்த்துதல் . தெரிவிப்பார்களே தவிர, பெண்கள் அந்தக் களிப்புக் கொண்டாட்டத்திலே சேர்ந்தவர்க ளல்ல; ஏதோ கிறிஸ்துவப்பெண்கள் அதில் கலந்துகொள்ளலாம்; அவ் வளவே தவிர, தமிழ்ப் பெண்களெல் லோருக்குமே ஒரு புது சுறுசுறுப் பைக் கொடுத்து, ஓ! இன்று தமிழ் வருஷப்பிறப்பு என்று வீடு முற்றி லும் மெழுகிக் கோலம்போட்டுப் பரி சுத்தப்படுத்துகிற சங்கதி நான் பிறக் கும்போதுதான் உண்டே தவிர, நீ பிறக்கிற ஜனவரி முதல் தேதியில் எந்தத் தமிழ்ப்பெண்ணும் வீடுமுற் றும் மெழுகிக் கோலம்போடுகிற சிங் காரங்கள் காட்டமாட்டாள் என்று பதிலுக்குப் பதில் இடிக்க வரலாம்!

ஃ

வாய் பெருத்த அடக்கமில்லாத மருகி தன் மாமியைப் பார்த்து "நீ யென்னடி உயர்த்தி, நானென்னடி தாழ்த்தி" என்று வல்லடி வழக்கைச் சொல்லடி மாமி என்பதாய் எகிக் குதிக்கலாம்! இன்னும் கோயிலிலே ஒரு பிராமணஸ்திரீ தன் மேல் பட்ட பெண்களைப் பார்த்து சற்றே விலகி யிருங்களடி என்று சொல்லும்போது, அப்போதுதான் புதிதாய்ப் பாகவத கோஷ்டியிலே சேர்ந்துகொண்டு உய ர்ந்துவிட்ட புதிய அம்மாமார்களும், தங்களைப் பிராமணர்களுக்குச் சம மாய் அசல் பிராமணராய் நினைத்துக் கொண்டிருக்கிற அம்மாமார்களும் உடனே குஸ்திக்குக் கிளம்பி, "நீ யென்னடி உயர்த்தி, நானென்னடி தாழ்த்தி" என்று பெரிய சண் டையை வளர்த்துக் கொள்ளலாம்! இன்னும் கல்யாணத்தில் தாம்பூலச் சண்டையிலும், முதல் மரியாதை பெறுகிற சண்டையிலும் இந்த உயர்த்தி—தாழ்த்திப் பாட்டுகள் வந்து மோதிக்கொள்ளலாம்! இந்த வீட்டுக்காரி அந்த வீட்டுக்காரியைத் தன் சமயலறைப் பக்கம் பாராதே, சாப்பிடுகிற வேளையில் வராதே என் னும்போதும் இந்த உயர்த்தி— தாழ்த்திப் பாட்டுகளை வீசிக்கொள்ள லாம்!

ஃ

இவற்றிற்கெல்லாம் மேலாக விகடன் சொல்லவந்த தென்னவென் றால், ஆங்கிலப் பெண்களும் தமிழ்ப் பெண்களும் ஒருவரையொருவர் மேலாக உயர்த்திக்கொள்வதைப் பற் றித்தான்! ஒரு ஆங்கிலப்பெண் முழங்கால் வரையுள்ள உடையோடே தன் நாயகனுடன் அச்சம் கூச்சமின் றிப் புருஷ நடை நடந்து செல்வ தைக் கண்டு தமிழ்நாட்டுப் பெண்கள் வேடிக்கையாய்ப் பார்த்துச் சிரிப் பார்கள்! இதென்ன, வெட்கம் நாணம் இல்லாமல் இப்படி ஆண் நடை நடக்கிறது; இவளுக்குப் படிப் பைத்தவிர வேறொன்றும் தெரியாது என்று பழிப்பார்கள்! அந்த ஆங்கிலப் பெண்ணோ இவர்கள் 18-முழச் சேலையையும், உடம்பு நிறைய நகை களையும் தூக்கிச் சுமந்துகொண்டு

---

நம் இந்திய நாட்டில் 800-ஆண்டுகட்குமுன் மகம்மதிய மணமும், 400- ஆண்டுகட்குமுன் கிறிஸ்துவ மணமும் வீசியது கிடையாது.—வித்வான் மறை திருநாவுக்கரசு.

பயந்த தன்மையுடன் ஒதுங்கி ஒதுங்கி நடப்பதைப் பார்த்து ஓ! படிப்பில்லாத—நாகரிகம் தெரியாத பெண் பிறப்புக்கள் என்று தாழ்த்திப் பரிகசிப்பார்கள்! இந்த இருவரும் பெண்கள்தானானாலும் ஒருவருடன் ஒருவர் பேசிக்கொள்ள ஒருவரின் பாஷை ஒருவருக்குத் தெரியாது! ஆனால், உயர்த்தி தாழ்த்திகளைப் பிரமாதப்படுத்திக்கொள்வதில் குறைவில்லை! ஃ

இத்தேசத்துப் பெண்களுக்கும், அன்னிய நாட்டுப் பெண்களுக்கும் வித்தியாசமென்னவென்றால், இவர்களுக்குப் பழக்க வழக்க அறிவு மாத்திரமேயன்றிப் படிப்பறிவு அத்தனையாய் அதிகமில்லையென்பதும், ஆங்கிலப் பெண்களுக்குக் கட்டாயமாய்ப் படித்தறிந்த கல்வியறிவு விளங்கியிருக்கிறதென்பதுமே! எப்படியென்றாலோ, இத்தேசத்துப் பெண்களில் பெரும்பாலார்க்கு புளியங்கொட்டையைப் பள்ளங்குழியில் போடவென்றால் வெகு கணக்காகப் போட்டுவிடுவார்கள்! ஒன்பது ரூபாயைப் பன்னிரண்டு பேருக்குப் பங்கு போடு என்றால், பல்லை உதட்டால் கடித்துக்கொண்டு பேந்தபேந்த முழிப்பார்கள்! விகடன் இப்படிச்சொல்வதைக்கண்டு எனதுபடித்தறிந்த தமிழ் ஸகோதரிகள் கோபித்துக்கொள்ளக்கூடாது! எத்தனையோ உத்தியோகஸ்தர்களுக்கும் வியாபாரிகளுக்கும், மகாமேன்மை பெற்ற கல்விமான்களுக்கும் 10-ரூபாய் நோட்டுக்கும்—5-ரூபாய் நோட்டுக்கும் பேதம் தெரியமுடியாத, எழுத்துவாசனையேயில்லாத மகாராணிகள் மனையாட்டிகளாய் வந்திருப்பதை இந்த இடத்தில் நினைத்துக்கொண்டு. அப்படிப்பட்டவர்களையே விகடன் இங்கு குறிப்பிடுவதாய் அர்த்தம் செய்துகொள்ளும்படி வேண்டுகிறேன்! நம்மில் எத்தனையோ பெண்களுக்குத் தங்களின் புருஷர்கள் வெளியிலே வைத்துக்கொண்டிருக்கிற பல வியவகார சங்கதிகள் அடியோடே தெரியாது! எவ்வளவு பணம் பிறர் கொடுக்க வேண்டும், எவ்வளவு கடன் தன் வீட்டுக்காரர் வெளியில் தரவேண்டும், தினமும் தன் வீட்டுகாரர் என்னென்ன வேலை செய்கிறார் என்கிற சங்கதிகளிலே நமது பெண்களில் அநேகர் தலையிட்டுக் கொள்ளமாட்டார்கள்! நகையில்லை, சேலையில்லை என்று சண்டை பிடிக்கத் தெரியுமே தவிர, வெளியிலே தங்களின் புருஷன்மாருக்குள்ள வெகு பாடான சம்பாத்திய கஷ்டங்களை அறிந்து வைத்தவர்களல்ல! இன்னும் சில பெண்களுக்குத் தங்களின் கணவன்மாரைப்பிடுங்கித்தின்பதும், தினமும் கலகஞ் சண்டைகளிடுவதுமே உத்தியோகமாயிருக்கும்! சமைப்பது—தின்பது — பிள்ளைகளைப் பெற்றுக்கொள்வதாகிய இவ்வளவோடு சங்கதி முடிந்ததென்று எண்ணிக்கொள்கிறவர்களே அதிகம்! ஆங்கிலப் பெண்களோ அப்படியல்ல. தங்களின் பர்த்தாக்களுடைய ஒவ்வொரு சங்கதியையும் தெரிந்துவைக்கிற அறிவும், அவர்களுடைய உத்தியோக காரியங்களில் தாங்களும் துணையாயிருக்கிற படிப்பின் சக்தியும் பெற்றிருக்கிறார்கள். மனைவிக்குத் தெரியாத எந்த ரகசியமும் அவர்களுக்குள் இராது. படித்தறிந்த தமிழ்ப்பெண்களிலும் பலர்

---

சிருஷ்டியில் முதற்படி விரும்புதலாகும். முதலில் தோன்றிய ஒரு விருப்பம் பின்பு பல கிளைகளாக விருத்திகொள்கின்றது. பல புதிய கொள்கைகளும் பிறகு தோன்றுகின்றன. கொள்கைகளே புதியனவற்றைப் படைக்கின்றது.

கணவனுக்குத் துணைவியாய் எவ்வளவோ வேலைகளில் பங்கு பெற்றுக் கொள்ளுகிறார்களென்பதை விகடன் ஒப்புக்கொண்டாலும், அந்தக் கணக்கு அதிகமாக இல்லையென்பதே விகடனுடைய பரிதபிப்பு! படித்துவிட்டதாகச் சொல்லுகிற பெண்களில் வெகு பேருக்குச் சரியான, ஒழுங்கான படிப்பே கிடையாதென்பதும் தெரிந்த சங்கதிதானே! பத்திரிகை, புஸ்தகம் இவற்றிலே ஆவலாதி கொள்ளுகிற பெண்கள் வெகு கொஞ்சம்தான்! இத்தகைய விவேகசாலினிகளான பெண்மணிகளையெல்லாம் விகடன் கைதூக்கிக் கும்பிடுகிறேன்!

ஃ

நம்ம படிப்பறியாப் பெண்களின் சங்கதிகள் வெகு வேடிக்கை! தாங்கள் அடிமைகள் என்று அவர்களுக்கு நினைவு! வீடு மெழுகி சுண்ணும்பு மாவால் வெகு அழகாகக் கோலம் இடுவார்கள்! வரவு செலவு, கழிவு, மொத்தம் காட்ட ஒரு பட்டி (Statement) ஏற்படுத்தவென்றால், அதற்குத் தெரியாமல் அடுப்பங்கட்டையில் முட்டிக்கொள்வார்கள்! சோறு கறிக்கும் ஊறுகாய் தினுசுகளுக்கும் உப்பு எவ்வளவு போடவேண்டும், கூட்டுக்கறிக்கு மிளகாய், கடுகு, சீரகம், மஞ்சள், கொத்தமல்லி எவ்வளவு போடவேணுமென்றால் வெகு தாட்டியாய்ப் போட்டு விடுவார்கள்! அதுகளெல்லாம் வெகு கணக்காயும் அளவுக்குச் சரியான ஒழுங்காயுமிருக்கும்! அந்தந்த (சம்பாரங்கள்) மசாலைகளினுடைய குணங்களென்னவென்றாலோ, அம்மியைப் போய்த் தான் விசாரிப்பார்கள்! ஆங்கிலப் பெண்களுக்கு இந்த சமையற்கட்டு வேலைகளும், உப்பைக் கணக்கறிந்து கை நிதானமாய்ப் போட்டுப் பரிமளிக்க வைக்கிற வேலைகளும் அவ்வளவாய்த் தெரியாதென்றாலும், திராசில் அளந்து போடுகிறதிலும், அந்தந்த வஸ்துக்களின் குணபேதங்களைப் படிப்பின் அறிவால் அறிந்து கொள்வதிலும் தேர்ந்தவர்களாய் இருப்பார்கள்! நமது பெண்கள் சாம்பல் புளி இவற்றைக் கொண்டு பாத்திரங்களைக் கண்ணாடிபோல் பளப்பளப்பாக்கிவிடுவார்கள்! இதிலே ஒரு காசும் செலவிராது. ஆங்கிலப் பெண்களோ அதற்கும் ஒரு தினுசுப் பவுடர் பொட்டணத்தைத் தேடிப்பிடிக்கப் போவார்கள்!

ஃ

நமது பெண்கள் அந்தந்த விசேஷித்த நாட்களில் அந்தந்த சடங்குகளை வெகு கணக்காய்ச் செய்துவிடுவார்கள்! அதற்கு அவர்களுக்கு நினைப்பூட்டக்கூடத் தேவையில்லை! ஆனால், அந்தந்த சடங்காசாரங்கள் எந்தெந்த ஐதீகத்தை ஒட்டினது, ஏன் செய்யவேண்டும், அமாவாசை என்றால் அதன் கருத்தென்ன என்றாலோ, பஞ்சாங்கப் புரோகிதனையும் பண்டாரத்தையும் துட்டு கொடுத்துக் கேட்கத் தேடுவார்கள்! ஆங்கில ஜாதிப் பெண்களோ அப்படியல்ல; அநேகமாகிய புஸ்தகங்களை வாசித்து சாஸ்திர சம்பந்தமான காரியங்களை நடத்தவும், சட்டதிட்டமாகக் கைத்தொழில் வேலைகள் செய்யவும், அத்துடன் பழக்க வழக்க அறிவைக் கையாடவும் திறமை பெற்றிருக்கிறார்கள்! மேலும், ஒரு யுக்தியான நடத்தைகளில் திறமை காண்பிப்ப

---

*ஈசுவர பக்தி காரணமாகக் கோவில் கட்டுகிறோம்; அதனால் ஈசுவரனுக்கு ஒரு லாபமுமில்லை. நம்முடைய ஆத்மா பரிசுத்தியை யடைகிறது, ஆத்ம பரிசுத்தத்திற்காகவே கர்மங்களைச் செய்யவேண்டும்.*

தென்றாலுமோ, பெண்களுக்கு இயல்பிலேயே தந்திர யுக்திகள் உண்டாகிறதென்றாலும். கல்வியில்லாப் பெண்களின் யுக்திக்கும், கல்வியறிவுள்ள பெண்களின் யுக்திக்கும் வெகு வித்தியாசம் காணப்படவே செய்யும்! ஒரு புமானுக்கு இரண்டு பெண்ஜாதிகளிருக்க, அதில் கல்வியறிவில்லாத ஒருத்தியினுடைய யுக்தியின் அளவை யறியவெண்ணி அவளை நோக்கி, அடி பெண்ணே! நான் அதிகாலை நாலுமணி திட்டத்திற்கு ஓர் தொழில் முகாந்தரமாய்ப் போகவேண்டியிருப்பதனால் என்னை அந்த நேரத்திற்கு எழுப்பவேண்டுமென, அவளும் அப்படியே ஒப்புக்கொண்டு, பிறகு என்ன செய்யலாமென யோசித்து, [illegible] கடைக்கு ஓடி முள்ளங்கியை வாங்கிவந்து குழம்பிட்டுக்கொண்டிருக்கும்போது, புருஷன் இதை ஜாடைமாடையிற் கண்டு, மறுபடியும் அவளை நோக்கி, அந்த நேரத்திற்குச் எப்படி எழுந்து கொண்டு என்னை எழுப்புவாயென்று கேட்க; "முள்ளங்கிக் குழம்பிட்டு சாப்பிடப் போகிறேன், அந்த முள்ளங்கியானது காலை நாலு மணிக்குச் சரியாய் என்வயிற்றைக்கலக்கி மலோபாதைக்கு எழுப்பும்" என்றாளாம்! அவன் யுக்தியை அறிந்து சிரித்துக் கொண்டு, கல்வியறிவில் மிகுந்துள்ள இன்னொருத்தியை நீ எப்படி மறுநாள் நாலு மணிக்கு எழுப்புவாயென்று கேட்க, "அதிகாலை நேரத்தில் குளிர்ந்த காற்று ஜில்லென்று வீசுவது எனக்குத் தெரியும். அது என்மீது தாக்கியவுடனே எழுந்திருப்பேன்" என்றாளாம்! படித்த இந்த யுக்திக்கும், படியாத அந்த யுக்திக்கும் எவ்வளவுதூர பாரமிருக்கிறது! இதுபோலவே, ஆங்கில நாட்டுப் பெண்களுடைய திறமையான நடத்தைகள் கல்வியறிவோடு ஒட்டிப் பெருமையடையச் செய்விக்கிறது! இத்தேசத்துப் பெண்களுடைய எந்தத் திறமையும் போதியப் படிப்பில்லாததால் பிரகாஸமடையவில்லை! இப்படிக் கல்விப் பிரகாசமடையாதிருப்பதால் இவர்களால் வரும் கஷ்டங்களையும் நஷ்டங்களையும் பாவம் இவர்களை மணந்துகொண்ட உத்தம புருஷர்கள் தாங்கிச் சுமக்கவேண்டிய பரிதாபத்திலிருக்கிறார்கள்! இப்படி இவர்கள் கல்வி அம்சத்தில் குறைவானாலும், ஊர் சண்டையை விலைக்கு வாங்குவதிலும், "நீ யென்னடி உயர்த்தி, நானென்னடி தாழ்த்தி" என்று சண்டையிட்டுக்கொள்வதிலும், தங்களின் கணவன்மாரைக் கண்ணீர் விடும்படி தூற்றிக் கஷ்டப்படுத்துவதிலும் ஆங்கிலப் பெண்களை விட மஹா பிரதாபம் பெற்றிருக்கிறார்கள்! இவ்வாறான மாதர்களைப் படிப்பு தெரிந்த நமது வித்தியாவர்த்தைகளான ஸகோதரிகள் திருத்தி உயர்த்தி செம்மைப்படுத்தவேண்டுமென்று விகடன் வணங்கிக் கேட்டுக்கொள்கிறேன்! பெண்கள் தங்களின் இனத்தைத் தாங்களே திருத்திவிட முற்பட்டால் அந்த வேலை வெகு துரிதமாயும் நன்றாகவும் நடக்குமென்பது இந்த விகடக் கிழவன் வெகுவாய்த் தெரிந்துவைத்த உறுதி! ஏதோ சொன்னேன்! பிறகு உங்கள் பிரியம்! ராம்! ராம்! சுபம்! சு! சுவாஹா!!

---

கடவுள் அவரவர் விரும்புவதைக் கொடுப்பாராயின், ஜீவர்களின் ஆசையைப் பெருக்கி விடுவார். கொடுக்கக் கொடுக்கமேன்மேலும் ஆசைபெருகும். ஆகையால்தான் அவர் நமது விண்ணப்பங்களின்படி செய்வதில்லை. தம்மிடத்தில் நம்பிக்கை யிருக்கும்படி செய்வதற்காக மாத்திரம் ஏதேனும் ஒரு சமயத்தில் அநுக்கிரகம் செய்வார்.




மருந்துகளின் பலத்தாலேயே தேகவலிவு கொள்ள நாடுவோரும், மரக்காலின் உதவிகொண்டு நடக்கும் கொண்டிகளும் ஒன்றுபோலத்தானும்!

ஒருவனை வரவில்லையே என எதிர் பார்த்து வருந்துவது முதல் நாளில் மட்டுந்தானும்! மறுதினமும் வரா விடில் மனது விட்டுப்போகுமாம்! மூன்றும் நாளிலும் காணுதபோது சீ! என்று சலித்துப் போகுமாம்!

இருக்கிற சொத்தும் தொலைவ தற்கு இன்னும் கொஞ்சம் ஏமாற்றி மோசம் செய்தால் சரியாகி விடுமாம்!

தீண்டாதார் யாரென்று ஒருவர் கேட்க, அதற்கு விகடன் கையில் பணம் இல்லாத ஏழையேயென்று பதில் சொன்னுனும்!

ஆகிறவன் எதிலும் ஆவானும்! ஆகாதவன் எதிலும் ஆகமாட்டானும்!

நடவாத—சுகிக்காத சங்கதிகளுக் கெல்லாம், நடந்ததுபோலும், அனுப வித்துச் சுகித்ததுபோலும் மனதில் நீளநீள நினைத்துக் கனவு கண்டு கொண்டு திருப்திபட வேண்டுமாம்!

ஏமாற்றுகிறவனும், ஏமாறுதவ னும் ஒன்று கூடிக்கொண்டால் பொழுதே விடியாதாம்!

பழய சங்கதிகளை நினைக்கும் போது, இப்போது புதிதாய்க் குலா வுதல் எல்லாம் எவ்வளவு நேரத் திற்கோவென்று சந்தேகிக்கும்படி யிருக்குமாம்!

கிடஸ்தர்களுக்கே உத்தமர்க ளென்று பேராம்! உத்தமர்களுக்குக் கெட்டவர்களென்று பேராம்!

தான் தடபுடல் அதிகாரம் செலுத்திய இடத்தில், அந்த அதி காரத்தை இழந்து விலகிவிட்டபின்பு தலைகாட்டவே முடியாதாம்!

வெளியிலே வெகு பெருமை! ஆனால், வீட்டுக்குள்ளே அரிசியில்லை யாம்! கையில் காசும் இல்லையாம்!

20-ரூபாய் சம்பளக்காரனுக்கு 19-ரூபா வீட்டுச் செலவானல், 200-ரூபா சம்பளக்காரனுக்கு 200-ரூபா யும் செலவாகிக் கடனும் வேறே படவேண்டி யிருக்கிறதாம்!

அவளுக்கு இவன்மேல் எண் ணம்; இவனுக்கு அவள்மேல் வெகு வெகு நினைப்பு. ஆனுல், தைரியமாய்த் துணிந்து வாய்விட்டுச் சொல்ல முடியவில்லையாம்!

இடம் கிடைத்தால் நேரம் கிடைக்கவில்லையாம்! நேரம் கிடைத் தால் இடம் கிடைக்கவில்லையாம்!

வாத்தியாரிடம் படித்த படிப் புக்கு வேலை கிடைக்காவிட்டாலும், அந்த வாத்தியாரின் தலைப்பாகை எப்போதும் கனத்தே இருக்குமாம்!

கலியாணத்துக்குப் பண உதவி செய்தவனுக்குக் கெட்டபேர் தானும்! எதுவும் செய்யாமலே தந்திரமாய்க் கூடக் குலாவியவன் நல்லவனும்!

அசங்கிதமாக க்ஷவரமேயின்றித் தன் தங்கை வீட்டுக்குப் போனுலும் அங்கே மதிப்பு குறைந்து கேவலமாகி சீக்கிரம் திரும்பிவிடும்படி ஆகுமாம்!

தான் செய்த மோசங்களைத் தன் எதிரே பிறர் சொல்லும்போது, காது கேட்காததுபோல் ஜாடையாகச் சிரித்தபடியே இருக்கவேணுமாம்!

நான் காலணு தந்து சாமான் வாங்க, கடைக்காரன் அதை மறந்து ஒரு அணு என எண்ணிப் பாக்கி முக்காலணுவைத் தர வருகையில் அதற்குக் கை நீட்டாதவர்கள் எத்தனைபேரென்று ஒருவர் கேட்கிறார்!

சாஸ்திரத்தையும் பார்க்காமல் நடக்கவேண்டிய அவசர ஆத்திர சங்கதிகள் எவ்வளவு என்று இன்னொருவர் வினவுகிறார்!

எவ்வளவு பணம் கொடுத்தாலும் டாக்டர் உடனே புன்னகை காட்டிப் பையில் போட்டுக் கொள்வாராம்!

வெளிக்குச் செய்கிற தடபுடல்களை யெல்லாம்—அது ஒரு பிழைக்கும் தந்திர வழியென்று—மற்றவர்கள் கண்டுகொள்ளாதபடி மூடி மெருகிட்டுப் பளபளப்பாக்க வேணுமாம்!

புத்திசாலியானவன் தன் பகைவர்களைப் பலநாள் பொறுத்துப் பிறகு படுகுழியில் தள்ளுவானும்! மூடனோ உடனே முட்டி எதிர்த்து இடித்துப் போலீஸ் கொட்டடிக்குப் போவானும்!

இவன்—அவனுக்கு அவ்வளவு திமிரா என. அவன்-இவனுக்கு இவ்வளவு திமிரா என்கிறானும்! கடைசியில் இந்த இருவரும் கொட்டிக் கொண்ட லாபம் எதுமில்லையாம்!

இங்கிலீஷ் புது வருஷமான 1935-ம் வருஷ அதிர்ஷ்டத்தைக் கால் பாகம் பார்த்தாய்விட்டது. தமிழ்ப் புது வருஷ அதிர்ஷ்டம் எவ்வாறிருக்கிறதென்று இனி ஆராயப் போகிறார்கள்ளாம்!

நல்லவர்க ளென்போரெல்லாம் நல்லவர்களுமல்லர்; கெட்டவர்களென்பா ரெல்லாம் அடியோடே கெட்டவர்களு மல்லவாம்!

விரதம் என்று சொல்லிக் கொண்டு சாதத்தை மட்டில் நீக்கி விட்டு, இட்டிலி, தோசை, உப்புமா, சொஜ்ஜி, லட்டு, மைசூர்பாகு, கோயிற் பொங்கல் முதலியவற்றால் வயிற்றை நிரப்புவது விரதமாகுமா வென்று கிருத்திகை, சோமவாரத்தைக் கேட்டதாம்!

ஒருவர் விகடனிடம் சென்று உலகத்தில் பயமில்லாதது எது வென்று கேட்க, அதற்கு விகடன் "உலகத்தில் எதைப் பார்த்தாலும் பயமே; போகத்தில் இருவகை ஸ்திரீ போகம் பெரிய பயத்தொல்லை; ஆகார போகம் மிதமீறினால் வயிற்றுத் தொந்தரையில் பயம்; ஜாதியிலும் உயர்வு—தாழ்வு சண்டைப் பயம்: தனமென்றாலோ—அதற்கு, தாயாதி—திருடர்—அரசர்—பெண் முதலியோர் எங்கே பறித்துவிடுகிறார்களோவென்ற பயம்; அதிக சம்பத்துள்ளவனுக்கோ எங்கே தனக்குத் தரித்திரம் வந்துவிடுமோவென்ற பயம்; வஸ்தாதுகளுக்கு நம்மை எங்கே எவர் ஜெயித்துவிடுவரோ என்ற பயம்; சாஸ்திரம் படித்தவர்களுக்குத் தன்னைவிட அதிகங் கற்று எவர் வாதுக்கு அழைப்பரோ என்ற பயம்; ரகசிய விபசாரம் எங்கு வெளி வருமோவென்று காமிகளுக்குப் பயம்; நல்லவனுக்குத் தன்னை எவர் கெட்டவர்களென்று சொல்வார்களோ என்ற பயம்! தேகத்துக்கோ எமன் எப்போது வருவானோ என்ற பயம்; இப்படியே உலகத்தில் உள்ள நாளும் மனிதருக்கு எப்படிப் பார்த்தாலும் பயம்தான்" என்றானும்!

எதிர்க்கிறவர்களுக்கு என்ன சமாதான பதில் எழுதலாமென்று ஒருவர் விகடனைக் கேட்டதற்கு, அப்படிப் பதில் எழுதி அந்த எதிர்த்தவர்களுக்கு ஒரு புது மதிப்பை யுண்டாக்குவதைவிட, அந்த எதிர்ப்பை எவ்வகையிலும் லக்ஷியம் செய்யாமல் இருந்துவிடுவதே மேல் என்றானும்!

## மதிப்புரை.

**நவரசக் கடிதங்கள் அல்லது புதுச்சோபனப் பெருமை :—**

[ஓர் இனிய காதற் களஞ்சியமான நாவல். ஈப்போ மாஜி "இந்திய மித்திரன்" பத்திராசிரியர் ஸ்ரீமான் B. வேணுகோபாலசாமி நாயுடு அவர்கள் இயற்றியது. விலை அணு 12.]

இந்நாவலின் ஆசிரியர் தமிழ் நாட்டுக்குப் புதியவரன்று. இவர் 1905-ம் வருஷத்தில் கோயமுத்தூரில் "கோவை ஜனாபிமானி" என்ற சிறந்த வாரப் பத்திரிகையை நடத்தி வந்த பெரியோராவர். "எனது நெடுங் கனவு", "கபட சந்யாசி" என்ற நாவல்களையும் இயற்றியவர். இப்பொழுது இவர் பிணங்கு பக்கத்தில் இருக்கிறார். 1775-கம்பம் காஜா ரோட், கோலப்பிறை Butterworth, Penang S. S. என்பது இவரது தற்கால விலாஸமாகும். தமிழ்மொழியிலே உயரிய நடையிலும், எளிய நடையிலும் வரையும் ஆற்றல் பொருந்திவரார்வர். தமிழ் நாட்டை விட்டுப் பிரிந்துபோனவருமாவர். இவரது ஞாபகம் தமிழகத்தில் அநேகருக்கு இருக்குமென்று நம்புகிறோம்.

நவரசக் கடிதங்கள் என்ற இந்த நாவல் மிகு ருசிகரமான நடையில், கௌரவமான காதல் முறையில் சிறந்த கற்பனை சக்தியுடனும் புதுச் சுவையுடனும் அமைந்துள்ளது. பத ஜோடினைகள் மிக்க அற்புதமானது. உயர்வும் இனிமையும் கலந்த நடை. உத்தம குண ஒழுக்கங்கள் பூண்ட பி. ஏ. பட்டதாரியான ரமணீமணியொருவள் தன் இனிய பர்த்தாவான பாரிஸ்டர் பட்டம் பெற்ற கண்ணியருடன் ரயில் பிரயாணமாகப் புறப்பட்டுச் சென்றபோது நிகழ்ந்த ஸம்பவங்களைத் தன் நேசிக்குப் பல கடிதங்களாக வரைந்திடும் பான்மையில் இந்த நாவல் அமைந்துள்ளது. கதைக்குக் கதையாகவும், கடிதங்கள் போன்ற தன்மையுடனும் இருவகைச் சுவையும் ஈந்திடுகின்றது. இந்த நாவலில் ஐரோப்பியரொருவரின் பிரஸ்தாபம் விகாரமாய்க் கவலை தருகின்றது. அங்கு பிரஸ்தாபிக்கப் படுகிறவர் தவறொழுக்கம் பூண்டவராகக் கதையின் முடிவில் காட்டும் விவரங்களால், தீய ஒழுக்கத்தைப் பற்றி மட்டுமே கண்டனம் செய்வதான தன்மையில் கதையின் இறுதி பூர்த்தி செய்யப்பட்டுள்ளது. முடிவில் அபூர்வமான காதல் வர்ணனையும் கொண்டிருக்கின்றது. இது மஹாராஷ்டிர பாஷா மொழி பெயர்ப்பாகும். ஆங்கிலநாட்டு நாவல்கள்மட்டுமே நமது தேசாசாரங்களுக்கு வேறுபட்டிருக்குமேயன்றி, நமது இந்திய பாஷைகளில் அமைந்துள்ள எந்த நாவலும் நமது பக்கத்தில் நடந்தேறிய ஸம்பவங்கள் போன்றே காட்சிதரும். இவ்விதமான நாவல் தமிழில் இதுகாறும் வெளிவந்ததில்லை. ஃ

**ஹரிஜன சேவைக் கீதம் :—**

இது திண்டுக்கல் தீண்டாமை விலக்குச்சங்கப் பிரசுரம். ஸ்ரீமான் க. ஆறுமுகன் அவர்கள் இயற்றியது. விலை அணு 1. இதிலுள்ள பாடல்களின் அமைப்பு நன்றாயுள்ளன. ஆனால், துவேஷமும் நிந்தையும் நீக்கப்படவேண்டும். படிப்பவருள்ளத்தில் துவேஷம் உண்டாகும் விதமாய்ச்சொற்களையோ, நடையையோ அமைப்பது கூடாதென்பது முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய விஷயமாகும். துவேஷநிந்தை எவ்வளவோ தீமைகளுக்கு ஊற்றாகும்.

# நான் பேயாக மாறிய விந்தை!



நான் வசித்தது ஒரு கிராமம்; அங்கு ஒவ்வொருவருக்கும் சாதாரணமாக வீடு, கொஞ்சம் நிலம், தோட்டம் இருப்பது சகஜந்தானே! என் உபாத்தியாயருக்கும் கொஞ்சம் நிலங்கள், வீடு தோட்டம் உண்டு. என் உபாத்தியாயர் தோட்டத்தில் விசேஷமாக உயர்ந்த ஜாதியைச் சேர்ந்த மாமரங்கள் இருந்தன. அவைகள் காய்க்கும் காலத்தில் கொத்துக் கொத்தாக மாம்பழங்கள் தொங்கிக்கொண்டு போவோர் வருவோரை யெல்லாம் தன்னிடத்து அழைப்பது போன்றிருக்கும். எனக்கு மாம்பழமென்றுமேல நாக்கில் தண்ணீர் ஊறும். அதிலும் கண்களுக்கு எதிரே சரமாரியாகத் தொங்கிக்கொண்டிருந்தால் யார் மனம்தான் சும்மா இருக்கும்? உபாத்தியாயருடைய தோட்டமாயிற்றே, அங்கு நாம் குறும்புத்தனம் செய்யலாமா என்று அப்போது தோன்றுகிறதில்லை. ஒன்றிரண்டு கற்களை விட்டெறிவேன். அப்பொழும் கனிகள் விழுகின்றனவா? கனிகள் மரத்தின் உச்சியில் அதிக தூரத்தில் தொங்கிக்கொண்டிருந்தன. எனக்குப் பின்னும் அதிக ஆசையாயிற்று. நமக்கு விரைவில் கிடைக்காததும் கைக்கு எட்டாததுமானஒரு வஸ்துவின்மேல் நமக்கு அளவில்லா விருப்பம் தோன்றுவது சகஜந்தானே! என்ன உபாயம் செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. எவ்வாறாவது பறித்துச் சாப்பிட்டாக வேண்டுமே! என்கூடச் சில சிறுவர்களை அழைத்துக்கொண்டு வந்து அவர்கள் உதவியால் கனிகளைப் பெறலாமென்று நினைத்து சிலரை அழைத்து என் துணைக்கு சகாக்களாகவைத்துக்கொண்டேன். சில தந்திரசாலிகள் தாங்கள் ஜனத்தலைவர் என்று பிரக்யாதி பெறுகிறவரைக்கும் எவரெவரையோ எல்லாம் நாடி நடந்து துணைதேடிக்கொண்டு சீக்கிரமே உச்சிக்கு எட்டி விடுகிறார்களல்லவா? அவர்களைப்போலவே நானும் இந்தக் காக்கான் போக்கான்களை யெல்லாம் சேர்த்துக்கொண்டு எவ்வளவு தூரம் பழங்களைக் கற்களால் அடிக்கமுடியுமோ அவ்வளவுக்கு அடித்துப் பார்த்தேன். எனினும், கடைசியில் சலித்து விடும்படியாயிற்று. பழங்கள் கீழே விழும் வழியைக் காணோம். பின் எனக்கு ஆத்திரம் மிகவேயாகி மரத்தின்மேல் சந்தடிசெய்யாது ஏறிவிட்டேன். அதே சமயத்தில் உயர்வானில் சந்திரன் தோன்றி அழகாகப் பிரகாசித்தான். நான் உச்சிக்கொப்பில் உட்கார்ந்து பழங்களைத் தின்றுகொண்டு மற்ற என் சகாக்களுக்கும் "பரோபகாரம்" செய்துகொண்டிருக்கையில், என் உபாத்தியாயர் அங்குவந்துவிட்டார். என் சகாக்களை இருமுறை கவனித்து, பள்ளிக்கூடத்திற்கு வந்தால் சரியான விருந்து கொடுப்பதாகச் சொல்லி வாய்மூடுமுன் என் சகாக்கள் இருந்த இடத்தில் புல் முளைத்துப்போன மாதிரி காணாமல் மாயமாய் மறைந்துவிட்டனர். நான் மாத்திரம் தன்னந்தனியே உச்சிக்கொப்பில் உட்கார்ந்திருந்தேன். என்

---

"தேவதரிசன விஷயத்தில் எந்த வகுப்பாருக்கும் சாஸ்திரங்களில் கட்டுப்பாடு விதிக்கவில்லை—பண்டித மாளவியா.

அதிர்ஷ்டவசமாக அவர் மரத்தின் மேல் பார்வையைச் செலுத்தவில்லே. பார்த்திருந்தால் என்னை என்ன செய்திருப்பாரோ அறியேன். மரத்திலேயே கட்டி என் தோலே உறித்தெறிந்திருப்பார். எனக்குக் கை கால்கள் உதற ஆரம்பித்தன. அந்த உதறலில் என் மேல்துண்டை நழுவ விட்டு விட்டேன். என் மனம் அப்போது எவ்வாறிருக்கும்! கட்டாயம் முதுகு பிய்ந்துவிட்டதென்றே நினைத்தேன். மேல்துண்டு காற்றில் ஊசலாடி உபாத்தியாயர் முன் ஒரு கிளையில் சிக்கிக்கொண்டு நடனம் செய்யத் தலைப்பட்டது. கண்டார் மேல்வேஷ்டியை! அவ்வளவு அழுக்கு வேஷ்டியை அவர் கண்டிருக்கவே மாட்டார். வாணியனிடம் சலவைக்குச் சென்று திரும்பின மாதிரியிருந்த அத்துண்டைக் கூர்மையாகக் கவனித்தார். மரக்கிளைகளின் சந்தில் மங்கலான நிலா வெளிச்சத்தில் அவர் மனதில் ஒரு ஆள் உருவம்போலப் பட்டதோ என்னவோ! அவரது கால்கள் முன்னும் பின்னும் போக மாட்டேனென்றது. ஏதோ பயத்துடன் பிதற்ற ஆரம்பித்துத் தலைவிரி கோலமாக ஓடி வீடுபோய் சேர்ந்தார். எனக்கு இந்த நாடகத்தின் பொருள் ஒன்றும் விளங்கவில்லே. பின்னும் கவனித்தேன். உபாத்தியாயர் பின்னால் கூடத் திரும்பிப்பார்க்காது ஓடவே, அவர் ஏதோ நடுக்கமான ஒரு புது எண்ணத்தை நினைத்துவிட்டாரென்று எனக்குத் தோன்றியது. இதுதான் நமக்குச் சரியான சமயம் என்று மரத்தினின்றும் அதிக விரைவாக இறங்கிக்கொண்டிருந்தேன். இதற்குள் உபாத்தியாயரின் தர்மபத்தினி அவர் ஏன் அவ்வளவு அலங்கோலமாகத் தோட்டத்தினின்றும் ஓடிவந்தார் என்று அறியத் தோட்டக் கதவண்டை வந்தாள். என் முதுகுபக்கத்தைப் பார்த்துவிட்டாள். அவளும் அலறி அடித்து வீட்டினுள் போய்க் கதவைத் தாழ்ப்பாளிட்டு அலறினாள். பக்கத்து வீட்டாரெல்லாம் இக்கூச்சலைக் கேட்டு அங்கு வந்து என்ன விசேஷமென்று வினவ, அவள் "ஐயோ! அந்தப் பேய் மாமரத்திலிருந்து இறங்குவதை என்கண்ணாரப்பார்த்தேன்; நானென்ன செய்யப் போகிறேனம்மா" என்று அலறினாள். இந்த வைபவங்கள் நிறைவேறுதற்குள் நான் என் இல்லம் அடைந்துவிட்டேன். அன்றே இவ்வற்புத சங்கதி எங்களூரில் காட்டுத்தீபோல் பரவியது. நான் பேயாக மாறின விந்தையை நினைத்து நினைத்துச் சிரித்தேன். சின்னஞ்சிறு வயதிலேயே 'பூச்சாண்டி' பயம் காட்டிக் கோழைத்தனமாய் வளர்க்கப்பட்டவர்களிலே என் உபாத்தியாயரும் ஒருவர்போலுமென்று எண்ணிக்கொண்டேன். அதுமுதல் அவர் அப்பேய் மாமரத்திற்கு வாரத்திற்கு ஒரு தடவை கோழி அறுத்துப் பொங்கலிடத் தொடங்கிக் கொண்டார்! நானும் அவர்களுடன் சேர்ந்து ஏதும் அறியாதவன்போல் நின்று அப்பிசாசைக் கும்பிடுவேன். நீங்கள் எந்த வெள்ளிக்கிழமையிலாவது இரவில் என் கிராமத்திற்கு வந்தால் இந்தப் பேய்த் தொழுகையைப் பார்க்கலாம்.

S. ஸ்ரீரங்கராஜு,
ஜெகன்னாதபாக், சைதாப்பேட்டை.

---

எப்போது ஒரு மனிதன் தன்பேச்சைக் கேட்கநேரமில்லாமல் பல கவலைகளோடும் அவசரப்பட்ட தன்மையாய் சரி சரி என்று பேச்சை முடிவுக்குக் கொண்டுவந்துவிடத் துரிதப்படுகிறானோ, அப்போதுதான் அவனுடைய குறிப்பை யுணராமல் மூடத்தனமாய் இன்னும் அதிக நேரம் பேச முற்பட்டுப் பெரிய வேதனையை உண்டுபண்ணி விடுகிறார்கள்.

# பறவைகளுக்குள்ள பறக்கும் சக்தி.



திகாலம் தொடங்கி நாநாதேசத்துக்கவிகளும் பறவைகள் பறப்பதைப் பலவிதமாக வர்ணித்துச்சொல்லியிருக்கின்றனர். "அவன் காற்றிலே பறக்கிறான்", "பறப்பான் பயிரிழந்தான், பறக்காஞ்சிபெண்டிழந்தான்" "பறக்கிற எச்சிற்கலையில் கல்லைத் தூக்கி வைத்தாற்போல்" என்று இப்படிப் பல உவமைச்சொற்களும் அது காரணமாகவேஉலகில்வழங்கலாயின.

ஃ

பறப்பது என்ற சொல்லைக்கேட்கும்போதே நம்மனதில் ஒருவிதமான மகிழ்ச்சி யுண்டாகின்றது. ஒரு பெரிய நதி பருவதப் பிரதேசங்களில் உற்பத்தியாகி அங்கிருந்து காடுகளிலும் நாடுகளிலும் சுற்றிச் சுழன்று கடலுக்குபோய்ச்சேருகின்றவழியைக் காண நமக்கு எவ்வளவு களிப்பு உண்டாகின்றது? அவ்விதமாகவே பறவைகள் ஆகாயத்தில் ஓடுகின்ற விநோதத்தைச் சற்று உற்றுப் பார்ப்போமாயின், அதைப் பார்க்கிலும் அதிகமாகக் களிப்புண்டாகும். பறவைகள்அநேகம் ஆகாயத்தில் பறந்தோடுகின்றனவே. அவை எவ்விடத்திற்குச் செல்லுகின்றனவோ நாம் அறியோம். நாம் பல பக்ஷிகளை விநோதமாய்ப் பிடித்து வளர்க்கின்றோமே. அவைகட்கு அழகிய வடிவமும் விசித்திர வர்ணமான ரக்கைகளும் இருந்தாலும் பறக்கும் திறமை யொன்றுமாத்திரம் இல்லாதிருக்குமாயின் அப்போது அவற்றினிடத்தில் நமக்கு அத்தனை ஆசை யுண்டாகா தல்லவா? இந்த அதிசயமான சக்தி யொன்றினாலேயே பறவைகள் மற்றப் பிராணிகள் எல்லாவற்றையும்விட அதிசயித்திருக்கின்றன. அது காரணமாகவே மனிதர்கள் தமக்கு அவ்வற்புதமான திறமையில்லையென்பதை ஒரு பெருங் குறையாக நினைத்து, அவைகளைப்போலத் தாமும் ஆகாயத்தில் பறந்து பார்ப்பதற்கு வேண்டிய உபாயங்களைக் கண்டுபிடிக்கவும், அதற்கேற்றயந்திரங்களை நிருமிக்கவும் பலவாறு முயன்றிருக்கிறார்கள். ஆதலால், பறவைகள் பறக்கும் விதத்தைப்பற்றி விசாரிப்பது அனைவருக்கும் இன்பந் தருவதாகும். பறப்பதென்றால் ஒரு ஜீவஜந்து தன் ரக்கைகளின் உதவியால் ஆகாயத்தில் சஞ்சரிப்பதென்று பொருளாகும்.

ஃ

பறப்பது என்னும் சொல்லின் கருத்தை நாம் தெளிவாய்த் தெரிந்துகொள்வதற்குமுன் பக்ஷிகளின் உருவமைப்பை ஒருவாறு விசாரிப்போம். இப்போது பறவைகளின் எல்லா உறுப்புகளையும்பற்றி விசாரிப்பது அவசியமன்று. தலை, கழுத்து, கால் இவைகள் பறப்பதற்குக் கருவியான உறுப்புக ளல்லவென்பது அனைவருக்கும் தெரிந்த விஷயமேயல்லவா? பக்ஷிகளின் உடல் எவ்விதமான தடையுமில்லாமல் ஆகாயத்தில் ஊடுருவிச் செல்வதற்கு ஏற்றவண்ணமாய் அமைக்கப்பட்டிருக்கின்றது. அவ்வுடலின் மேற்புறம் முழுதும் அணுவளவும் மூலைமுடுக்கு மேடுபள்ளம் ஒன்

---

சட்டப்படி ஒரு காரியத்தை வற்புறுத்த ஆரம்பித்தால் அந்தக் காரியம் மத சம்பந்தத்தை (அதாவது மதவுரிமையை) இழந்துவிடுகிறது.—மகாத்மா

றுமில்லாமல் எங்கும் ஒரே சரியாக அமைக்கப்பட்டிருக்கின்றது. அதற்குக்காரணம் உடலின்மேற் பொருந்திய இறகுகளெல்லாம் அத்தனை ஒழுங்காய் அமையுமாறு வெகு நுட்பமாயச் சேர்க்கப்பட்டிருப்பதேயாம். இந்த இறகுகளெல்லாம் வித்தியாசமின்றிப் பின்புறமாகவே திருப்பி அமைக்கப்பட்டிருக்கின்றன. பறக்கிற சமயத்தில் அவைகள் பறவைகளின் உடலோடு அதிகநெருக்கமாய்க் கடித்துக்கொள்கின்றன. பறக்கும்போது பார்த்தால் பறவைகளின் உடல் மார்பண்டை பருத்து. வாற்புறம் சிறுத்து முட்டை வடிவமாகக் காணப்படும். அப்போது தலையும் கழுத்தும் உட்புறமாய்இழுத்துக்கொள்ளப்பட்டாவதிருக்கும். வெளியே நீட்டப்பட்டாவதிருக்கும். அவ்வண்ணமே கால்கள் பின்புறமாய் நீட்டப்பட்டாவது இருக்கும். உடலுக்குள் இழுத்துக் கொள்ளப்பட்டாவது இருக்கும். புரு, கிளி, குயில் முதலிய பாட்டுப் பாடுகின்ற பறவைகளும் இவைபோன்ற இன்னும் பல பறவைகளும் கால் கீழே தொங்குவதனுல் பறப்பதற்குத் தடையுண்டாகாதபடி, பறக்கும்போது அவற்றை உடலுக்குள் இழுத்துக்கொள்கின்றன. கொக்கு, நாரை முதலிய நீரில் நீந்துகின்றவைகளான நீண்ட கால்களுள்ள பறவைகளெல்லாம் இரண்டுகால்களையும் ஒரே அளவாய்ப் பின்புறமாக நீட்டிக்கொள்ளுகின்றன. அதனுல் முன்புறத்தில் சாதாரணமாய். அந்தப் பக்ஷிகளுக்குள்ள நீண்ட கழுத்தின் பளுவுக்குப் பின்புறமாய் நீட்டிய காலின் பளுவு எதிரெடையாகின்றது. பறவைகளெல்லாம் பறக்கும்போது தம் முடலின் மையநிலை (Centre of Gravity) இரண்டு ரக்கைகளுக்கும் நடுவிலுள்ள ஓரிடத்தில் அமையும்படியாக நின்று பறக்கின்றன. ஆனுல் எப்பொழுதும் அவற்றியின் மையநிலை யதுஉல்ல. தோளுக்குப் பின்னுல் ஓரிடமாம். இவ்வண்ணம் பக்ஷிகளின் தேகத்தினளவு சமயத்துக்குத் தக்கபடி வெவ்வேறு விதமாயிருக்கவும். பக்ஷிகளின் உடல் அதன் பரிமாணத்திற்கேற்ற பளுவுள்ளதா யிராமல் இலேசாயிருக்கவும் எற்றவிதமாய் அமைக்கப்பட்டிருப்பது எத்தனை விசித்திரமானது !

ஃ

இதற்கு இரண்டு விதமான காரணங்களுண்டு முதலில் எறக்குறைய எல்லாப் பறவைகளுடைய எலும்புகளும் குழல் போலானவை. ஆனுல், சிறிய எலும்புகள் வெகுவாய் அப்படியில்லை. காலெலும்பு முதலிய நீண்ட எலும்புகளெல்லாம் முற்றும் போலாகவாவது, உள்ளே ஒருவிதமான நிணம் அமைக்கப்பட்டாவது இருக்கின்றன. அதனுல் அவ்வெலும்புகளுக்குள் காற்று புகுந்துகொண்டிருக்கின்றது. ஆனதுபற்றிப் பறவைகளின் எலும்புகள் கூடியவரை இலேசாகவே யிருக்கின்றன். முலைப்பாலுண்டு பிழைக்கின்ற பிராணிவர்க்கங்களுக்கும், பாம்பு முதலிய ஊர்வனவற்றிற்கும் எலும்புகள் கெட்டியாய் இருப்பதால் கனமானவையாம்.

ஃ

இரண்டாவது, பக்ஷிகளின்உடம்பிலே பலவிடங்களில் இரண்டிரண்டாய் பலபெரியபைகளிருக்கின்றன; முக்கியமாய் அடிவயிற்றில் அநேகம் உண்டு. அவை யாவும் உள்ளே காற்று கொள்ளத்தக்கவைகள். அவை ரத்த நாடிகளின் மூலமாய் சுவாசப்பைகளோடு சம்மந்தப் பட்டிருப்பதனுல், சுவாசப்பைகளினின்றும் காற்று அவற்றுள் சுலபமாய் வந்தடையும். மேலும் முன்கை யெலும்பு முதலிய சில பெரிய போலான எலும்புகளுக்குள் உள்ள குழாய்க்கும் சுவாஸப்பை

கரைக்கும். சம்பந்தமுண்டு. அதனால் அவ்விதமான எலும்புகளுக்குள்ளும் காற்று வந்தடையும்.

இவ்விஷயத்தைப் பலதரம் பரிசோதித்து அறிந்திருக்கிறார்கள். ரக்கை யறுந்து கீழே விழுந்த பக்ஷியைப் பிடித்து அதன் வாயையும் மூக்கையும் ஒருமிக்க மூடிவிட்டுப் பார்க்கையில் அது மூச்சுத் திணறாமல் அப்போதும் சுலபமாய் மூச்சுவிட்டுக் கொண்டிருக்கக் காணப்பட்டிருக்கிறது. எலும்புகளிலுள்ள துவாரங்களின் வழியாய் சுவாஸப்பைகளுக்குள் பறவைகள் காற்றை ஏற்றுக்கொள்ளும்படி இருப்பதனால் அப்படியாகின்றது. மேலும், பறவைகளின் உடலிலுள்ள ரத்தம் மற்றப் பிராணிகளின் உடலிலுள்ள ரத்தத்தைப் பார்க்கிலும் அதிக உஷ்ணமானது. ஆனதுபற்றி அவற்றின் தேகத்தில் சுவாஸப்பைகளிலும் மற்றும் பல ரந்திரங்களிலும் உள்ள வாயு அந்த ரத்தத்தின் சூட்டினால் தானும் சூடாகி. அதனால் தன் இயற்கைப்படி அதிகமாய்ப் பரவ, அதைக் கொண்டிருக்கும் பைகளின் உருவம் பெரியதாகின்றன. அப்படிப் பெருத்தால் உடல் தன்னளவுக்கு அதிக லேசாகின்றது.

இயற்கையில் இவ்விதமாய் அமைந்திராமல், பறவைகள் தாமே முயன்று சுவாஸப்பைமுதலிய தம்முடம்பிலுள்ள ரந்திரங்களையெல்லாம் சூடாகிப் பரவிய காற்றைக்கொண்டு நிரப்பவேண்டுமென்றால் எவ்வளவு கஷ்டசாத்தியமாகும்! காக்கை, புறா முதலிய சாதாரணமான சிறு பறவைகளுக்கே காற்றுப்பைகள் பல கன அங்குலமளவு பருத்தவைகளாயிருக்கின்றன. இந்த அளவைக்கொண்டு பார்ப்போமாயின், இப்பறவைகளை ஒரு சிறிய கும்மட்டத்துக்கு ஒப்பாகச் சொல்லலாம். இந்தச் சூடுகொண்ட காற்று எதையும் உயரக் கிளம்பும்படி செய்கின்றது. ஆயினும், அந்தக் காற்றானது பறவையின் உடலை இலேசாக்குமே யொழிய, அதை நன்றாய்ப் பறக்கும்படி முற்றும் கிளப்பமாட்டாது. ஏனெனில், அரை பவுண்டு எடையுள்ள ஒரு பறவையைத் தூக்குவதற்கும் பல கன அடி அளவுள்ள அனற்காற்று அவசியமாம். அடியிற் காட்டும் உதாரணத்தால் இவ்விஷயம் மிகத் தெளிவாய் விளங்கும். நன்றாய்ப் பழகிய ஒரு பறவையைத் தராசில் வைத்துக் கருத்தாய் நிறுத்தினார்கள். நிறுக்கும்போது மிகப் பெரிதுமல்லாமல் சிறிதுமல்லாமல் நடுத்தரமான ஒரு பக்ஷி சாந்தமாயுட்கார்ந்திருக்கையில், ஐந்து அவுன்ஸ் எடையுள்ளதாய் இருந்தது. பிறகு சிறிது தூரத்திலிருந்து ஒருவர் அதைக் கூவி அழைக்கும்படிசெய்து, அதைக்கேட்டு அப்பறவை ரக்கையை விரித்துக் கொண்டு பறக்கச் சித்தமாகி இருந்த இடம்விட்டுக் கிளம்பாமலே இருந்த தருணத்தில் நிறுத்தார்கள். பக்ஷி நின்ற தட்டு முன்னளவுக்கு அப்போது கொஞ்சம் மேலே தூக்கிற்று. இதற்குக் காரணம் என்னவென்றாலோ, பறவைகள் தாம் பறகக எழும்பொழுதுதான் தம் தேகத்திலுள்ள காற்றுப் பைகளைச் சூடுகொண்ட காற்றினால் நிரப்புகின்றன. அதனால் அவற்றின் தேகம் அப்படி லேசாகின்றதென்ன வேண்டும். இப்படி பறவைகளின் உடல் இலேசாகவும், மறு நிமிஷத்தில் அது எழுந்தோடவும் ஏற்றவண்ணமாய் அவற்றின் உடல் அத்தனை அற்புதமான விதமாக நிருமிக்கப்பட்டிருக்கின்றது.

பறவைகள் எவ்வளவு அதிக தூரம் பறக்கவேண்டுமோ அவ்வளவுக்கவ்வளவு தமது தேகத்தை இலேசாக்கிக்கொள்ளவேண்டிவது அவசியமாதலின், தாம் பறக்கவேண்டிய தூரத்திற்கு எற்றபடி தம் உடலிலுள்ள காற்றுப்பைகளுள் காற்றை அளவிட்டு அமைக்கின்றனவெனப்பல சோதனைகளால் கண்டறியப்பட்டிருக்கிறது.

ஃ

இதை யோசிக்கையில், பறவைகளை ஆவியாய் உயரக்கிளப்பும் கும்மட்டத்துக்கு ஒப்பாகச் சொல்லலாம். இப்படி இந்த சூடான காற்று பக்ஷியை ஒருவாறு இலேசாக்குகின்றதாயினும், அந்தக் காற்றே பறவைகள் பறப்பதற்கு முதற்காரணம் என்று கொள்ளலாகாது. இறக்கைகளின் வேலையில் ஒரு பகுதியை அது எற்றுக்கொள்ளுகிறதே யொழிய மற்றொன்று மில்லை. மேலும், மிகப் பெரிய பைகள் பறவைகளின் அடிவயிற்றிலேயே இருப்பதால் அவைகள் காற்றினால் உப்பும்போதெல்லாம் பக்ஷிகளின் தேகத்து மைய நிலை முன்புறமாய் மாற்றப்படுகின்றது. இவ்வண்ணமாக, பறவைகள் பறக்கும்போது தம் உடலைச் சூடுகொண்ட காற்றினால் நிரப்பி இலேசாக்கிக்கொண்டு எளிதில் உயரக் கிளம்பிச் சுலபமாய்ப் பறந்தோடுகின்றன. வாயுமண்டலத்தில் எழுந்துலாவும்படி அத்தனை லேசாக நமது உடலும் நிருமிக்கப்பட்டிருக்குமாயின் அப்போது நாம் வேண்டும்போதெல்லாம் இவ்வுலகமுழுதும்பறந்துபோய் நொடிப்பொழுதில் அங்கங்குள்ள அதிசயக் காட்சிகளைக் கண்டுகளித்து வரக் கூடுமெல்லவா? இப்பொழுது சாதரணமாய் இருக்கையிலேயே மனிதர்கள் ஒருவருக்கொருவர் பல பொல்லாங்குகள் செய்யப் புகுந்திருக்கையில் ஆகாயத்தில் பறக்கும் அற்புதமான திறமையும் உண்டானால் எப்பாடு படுவார்களோவென்று அந்தத் திறமையைக் கடவுள் அவர்களுக்கு அளிக்கவில்லை போலும்.



## ரு. 150 ரோக்கப்பரிசின் விடை விவரம்.

சென்ற மாசி மாதத்திய "அமிர்தினி"யில் வெளிவந்த ஊர்கள் போட்டிப் பந்தயத்தின் சரியான விடை:—போத்தனூர், கங்கை கொண்டான், வீரவநல்லூர், இரங்கூன், திருவனந்தபுரம், கொழும்பு, இராமேஸ்வரம், திருவண்ணாமலை, கரூர், திருப்பரங்குன்றம். மொத்தம் 57 பேர்கள் சரியான விடை அனுப்பியிருக்கின்றனர். ஆகவே அவர்களனைவருக்கும் எங்கள் மானேஜ்மெண்டின் முடிவின் பேரில் இனம் 1-க்கு ரு. 2-9-0 (ரூபாய் இரண்டு அணா ஒன்பது மட்டும்) வீதம் அனுப்பப்படும். இது விஷயமாக போட்டியில் கலந்து கொண்ட ஒவ்வொருவருக்கும் தெரிவிக்கப்படும்.

எம். எ. கிருஷ்ணசுவாமி பிள்ளை,
மானேஜர் "கிருஷ்ண அதிர்ஷ்ட நிலையம்" மதுரை.

---

[1] ஒருவனை வாவென்று அழைக்கப்போக, பிறகு ஏன் அழைத்தோம் என்று நினைக்கும்படியாக அவன் பல்நாள் வரைபலமாய்க்குந்திக் கொள்கிறான் கடைசியில் இட்டவனுக்கு எற்படுவது கெட்ட பெயரும் பகையும்தான்.

# சென்றமாதம்

## மகாமக வைபவம்:—

கும்பகோணத்தில் 10-3-1933ல் மகாமக வைபவம் அற்புதானந்தமாய் நிறைவேறியது. தென்னிந்தியாவில் இஃதோர் அதிசய சம்பவம். பன்னிரு வருடங்கட்கு ஒரு முறைதான் இந்த அபூர்வ தரிசனம் லபிப்பது. கும்பகோணத்திற்கு வந்திருந்த ஜனத்திரளின் நெருக்கம் சொல்லி முடியாது. வீதிகளில் செல்வதற்கே முடியாமல் ஒருவர் மீதொருவர் இடித்துக்கொண்டும் மோதிக்கொண்டும் போகவேண்டியிருந்தது. இரவில் கும்பகோணம் தெய்வலோகமாய் சோபித்தது. அரசர் இருக்கும் நகரம் போன்றும் இலங்கியது. எத்தனை லக்ஷ ஜனங்கள் வரினும் தாங்கக்கூடியதாய் நகரத்தின் அமைப்பும் வீதிகளின் விசாலமும் இருந்தது. நகரத்தை யலங்கரித்து நின்ற கடைகளின் காட்சியும், பொருட்காட்சிகளின் அழகும் பார்க்கப் பார்க்கப் பரவசமே. ரதோற்சவங்களின் விமரிசையும், தெப்பத் திருவிழாவும், பாணவேடிக்கைகளும் பெரிய நேத்திரோத்ஸவமாயிருந்தன. 10-ம் தேதியான மகாமக தினத்தன்று பல லக்ஷக்கணக்கான பக்தகோடிகள் மகாமக தீர்த்தத்தில் நீராடி, பின்பு பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து, அங்கிருந்து காவிரி நதியில் மூழ்கிப் பகவானைத் துதித்த காட்சியை என்னென்போம! தென்னிந்திய பூமியின் பெருமையை மகாமகத்தின் போதுதான் கண்டுணரவேண்டும். மகாமகத்தைத் தரிசித்த பாக்கியசாலிகள் தங்கள் ஜீவகால முழுதும் அதை மறவார்கள். போலீஸாரின் ஏற்பாடும், முனிசிபாலிட்டியாரின் முன்னமைப்புத் திட்டங்களும் கொண்டாடத் தக்கவையாயிருந்தன. ரயில்வே ஸ்டேஷனில் வாடகை வண்டிகள் நிற்குமிடத்தில் புது இருப்புப்பாதை யமைத்து அங்கு ரயில் வந்து நிற்கும்படியும், இன்னும் அநேக சௌகரியமான ஏற்பாடுகளையும் ரயில்வே கம்பெனியார் அமைத்திருந்தனர். எவ்வளவு ஏற்பாடுகள் செய்திருந்தபோதிலும் ஜனத்திரள் அபரிமிதமாதலால், ஜன நெருக்கம் சமாளிக்க முடியாததாயிருந்தது. தயிர் சாதமும், சாம்பார் சாதமும் பொட்டணங்களாக முனிசிபாலிட்டியார் விற்கச் செய்திருந்த ஏற்பாடு கொண்டாடத்தக்கது. ஆயினும், காபி ஹோட்டல்களிற் பலவற்றின் காபி வெந்நீராகவே யிருந்தது. மகாமகத்தின் பெயரைக்கொண்டு பணம் திரட்டியவர்கள் அநேகராவர். பணம் செலவிட்டு மகிழ்ந்தவர்களும் சந்தோஷமாகவே இல்லம் திரும்பினர். அடுத்த மகாமகத்திற்கும் நாம் இருந்து பார்த்து மகிழ எம்பெருமான் அருள் பாலிப்பாராக.

---

“மத விருக்ஷம்” என்ற தமிழ் நூல் சேலம் பகடால நரசிம்மலு நாயுடு அவர்களால் 1882-ம் வருஷத்தில் இயற்றப் பட்டது. இதன் இரண்டாம் பதிப்பு 29-வருஷங்கட்குப் பிறகு 1911-ம் வருஷத்தில் வெளியாயிற்று. இந்நூலில் உலகத்தின் ஸர்வ மதங்களும் சங்கிரகமாகச் சொல்லப்பட்டுள்ளன. மிக்க ஆராய்ச்சியுடன் அமைந்த நூல். இப்போது இது விலைக்குக் கிடைக்கவில்லை.

**காங்கிரஸ் தடை:—**

*பழயநாளில் காங்கிரஸ் கூடுவது சாதாரணமாயும் நிச்சயமாயும் இருந்தது. காங்கிரஸ் எவ்வளவு மிளகாய்க் காரமாய்ப் பேசினும் அது குற்றமில்லாதிருந்தது. இன்றோ வேறுநிலை. கல்கத்தாவில் காங்கிரஸ் மகா சபையைக்கூட்ட முயன்றும் அரசினர் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. சட்டமறுப்பைக் காங்கிரஸ் கைவிட்டால் தான் காங்கிரஸ் கூடலாம் என்று தெரிவித்து விட்டனர். இதன்பின் தேசபக்தர்கள் யாது செய்வரோ தெரியவில்லை.*

---

# ஆபீஸ் இடம் மாறுதல்

நமது "அமிர்த குணபோதினி" ஆபீஸும், "அமிர்த குணபோதினி" அச்சுக்கூடமும் இதுவரையில் சென்னை தங்கசாலைத் தெரு 302-வது இலக்கமுள்ள இடத்தில் இருந்தமை அனைவர்க்கும் தெரிந்த விஷயமே. இப்போது நாம் செய்திருக்கும் விசேஷ அபிவிர்த்திகளுக்கு இடம் போதவில்லை யாதலின், சென்னை, பிராட்வே, **158-A,** இலக்கமுள்ள கட்டிடத்திற்கு இந்த மார்ச்சு மாதம் 1-ந் தேதி முதல் மாற்றியிருக்கிறோம். இனி கடிதங்கள், மணியார்டர்கள் யாவும் பழய தங்கசாலைத்தெரு விலாசத்திற்கு அனுப்பாமல், சென்னை, பிராட்வே, **158-A,** இலக்கமுள்ள புதிய விலாஸத்திற்கே அனுப்புமாறு இதன் மூலமாய்த் தெரிவித்துக்கொள்கின்றோம்.

**இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்,**
புரோப்ரைட்டர், 158-A, பிராட்வே, சென்னை.

*வெளிக்காற்றுப் படின் சில வஸ்துக்கள் கெட்டுவிடுகின்றன. ஜனன உற்பத்திவிதைகளும் அவ்விதமே. அவை காற்றுப் புகாத இருண்ட சூக்ஷ்மமான இடத்தில் தூவப்பட்டு உருக்கொள்ளும்படி இறைவன் செய்துள்ளார்.*

---

*தலைவலிக்கு ஈர மண்ணைக்கொண்டு பற்று போடுவது தமக்குக் கைகண்டதென்று மகாத்மா கூறினர்.*




# கஞ்சித்தண்ணீர் ஊற்றிய மருமகள்.



சோழங்கநல்லூர் என்ற கிராமத்தில் சோமசுந்தர நாயக்கர் என்ற ஒருவரிருந்தார். அவருக்கு சொக்கம்மாள் என்ற ஒரு மனைவியும், சொர்ணம்மாள் என்ற ஒரு தாயாரும் இருந்தார்கள். அவருடைய தாயாருக்குக் கண் தெரியாமல் தடமாட்டமாய் விட்டதால் பின்கட்டில் ஒரு சிறிய அறையில் தன் தாயாரை அதில் இருக்கும்படியாகச் செய்து தன் மனைவியைப்பார்த்து "அடி சொக்கம்! என் தாயை நன்றாக போஷித்துக்கொண்டு வருவாய்" என்று உத்திரவு செய்தார். அந்த சொக்கம்மாள் தினம் தினம் தன் வீட்டில் வடிக்கும் கஞ்சித்தண்ணீரை சாக்கடையில் போக ஒட்டாமல் அதில் ஒரு சாதமும் இல்லாமல் எடுத்துவிட்டு தன் மாமியாருக்கு ஏற்கனவே கொடுத்திருக்கும் சட்டியில் ஒரு உப்புக்கல்லு போட்டு ஊற்றிவிடுவாள். அந்தக்கஞ்சித்தண்ணீரை குடித்துக்கொண்டு தெய்வமே என்று கிடந்தாள் கிழவி. இது சங்கதி நமது கதாநாயகராகிய சோமசுந்தர நாயக்கருக்குத் தெரியாது. இது நிற்க, சொக்கம்மாள் தன் புருஷன் சாப்பாட்டிற்கு வந்தவுடன் உடம்பு குளிக்க வெந்நீர் விளாவிவிட்டு, தன் மாமியிடம்போய் (மாமி என்பது உரத்த சப்தத்திலும் மற்ற சங்கதி மெல்லிய குரலிலும் கேட்டுக்கொண்டு வந்தாள்) "மாமி மஞ்சள் வேணுமா மஞ்சள்" என்றாள். அதற்கு கூனிபாட்டி "வேண்டாண்டியம்மா வேண்டாம்" என்றாள். மறுபடியும் "மாமி குங்குமம் வேண்டுமா குங்குமம்" என்றாள். அதற்கு அவள் "வேண்டாண்டியம்மா வேண்டாம்" என்றாள். பிறகு "மாமி! பூ வேண்டுமா பூ" என்றாள். அதற்கு கண் தெரியாத பாட்டி வாணாண்டியம்மா வாணா என்று சொன்னாள். மறுபடியும் நம் கதாநாயகி மாமி உனக்கு "ஆம்படியான் வேண்டுமா ஆம்படியான்" என்று கேட்டாள். அதைக் கேட்ட கிழவி வெகு ஆத்திரத்துடன் "வேண்டாண்டியம்மா வேண்டாம்" என்று உரத்த குரலில் கூறினாள். இவைகளைக் குளித்துகொண்டிருந்த புருஷன் கேட்டு மனைவி வந்ததும், என்னடி என் தாயார் வேண்டாம் வேண்டாம் என்கிறார்களே என்று கேட்டார். அதற்கவள் "லட்டு வேணுமா; ஜாங்கிரி வேணுமா, பேணி வேணுமா, மைசூர்பாகு வேணுமா, குலோப்ஜான் வேணுமா,

---

சிலர் புஸ்தகத்தை விலைக்குக் கேட்டுவிட்டு ஊருக்குப் போய்ப் பணம் அனுப்புவதாகச் சொல்லுகிறார்கள்.

டில்லி தர்பார் வேணுமா, பால் பர்ப்பி பாசந்து பால்கோவா வேணுமா, காரசோமாசு வேணுமா, பொலவு வேணுமா, பிரிஞ்சி வேணுமா, பரோட்டா வேணுமா. பஜ்ஜி வேணுமா, போண்டா வேணுமா, இது வேணுமா அது வேணுமா என்று எதைக் கேட்டாலும் வேண்டாம், வேண்டாம் என்கிறார்கள். நான் என்ன செய்வேன் என்றாள். அதற்கு அவர் கணவன் "போகட்டும் அந்தம்மாள் குடல் கொடுத்துவைக்கவில்லை என்ன செய்கிறது" என்று சொல்லி தன் தாயின்மேல் கொஞ்சம் வெறுப்பாகவே இருந்தார்.

ஃ

இது நிற்க, ஒருநாள் செம்மஞ்சேரி என்ற கிராமத்திலிருந்து சொக்கம்மாளுடைய தாயாருக்கு உடம்பு அசௌக்கியமென்று ஆள் வந்தது. அதற்கு இவள் போகிற அவசரத்தில் கஞ்சி தண்ணீரில் விழுந்து இருக்கும் சாதத்தை எடுக்காமல் மாமியாருக்குச்சட்டியில் ஊற்றிவிட்டு புருஷனுக்கு சாப்பாடேச்சித்தம்செய்து விட்டுச் சென்றுவிட்டாள். உடனே சோமசுந்தர நாயக்கர் வீட்டுக்குவந்து உடம்பு குளித்துகொண்டிருந்தார். அதேசமயம் கிழவி கஞ்சி தண்ணீரில் கைவிட்டுத் தடவிப் பார்த்து அதில் இரண்டு மூன்று சாதம் இருக்கக் கண்டு (பாபிஷ்டி மெதுக்கா நாகண்டிக்கி எட்ட சிக்கிதிவே) "பாபிஷ்டி பரிக்கையே என் கண்ணுக்கு எப்படி அகப்பட்டாயோ" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது அதைக் கேட்ட அவள் பிள்ளை தன் தாயாரிடம் வந்து "அம்மா! இத்தனை நாளாய்ச் சாதம் சாப்பிடவில்லையா? என் அப்படிச் சொன்னாய்" என்று கேட்டார். அதைக் கேட்ட கிழவி "ஐயோ மகனே! என்னை இங்கு கொண்டுவந்து வைத்தபிறகு வெறும கஞ்சித்தண்ணீர் ஊற்றி வந்தாளே தவிர சோறுகண்ட மூளி யாரப்பா" என்று கதறி அழுதாள். அதைக் கேட்ட பிள்ளை "அப்படியா அம்மா இச்சங்கதி எனக்குத் தெரியாதே இப்படியா செய்தாள்; இருக்கட்டும்; இதற்கு நான் ஒரு தந்திரம் செய்கிறேனென்று, உடனே பீங்கான் கடைக்குச்சென்று உடைந்த பீங்கான் ஓடுகளைக் கொண்டுவந்து பில்லை பில்லையாக நறுக்கி ஒரு தலைகாணி உறையைப்போல் பை தைத்து அதில் போட்டு ஐந்து ரூபாயைச் சில்லரையாக மாற்றி அதின்மேல் போட்டு உறையை தைத்து தன் தாயாரிடம் கொடுத்து அம்மா உன் மருமகள் கஞ்சித் தண்ணீரை ஊற்றவரும் சமயத்தில் சட்டென்று இந்த உறையை இழுத்து உன் துடையின்கீழ் வைத்துக்கொள். பிறகு உனக்கு நடக்கும் சம்ரக்ஷணையைப் பார் என்று சொல்லி விட்டுப் போய்விட்டார். தன் தாயாரைப் பார்க்கச்சென்ற சொக்கம்மாள் தாயாருக்கு சுகமாயிருக்க அன்றுமாலையே வீட்டிற்கு வந்துவிட்டாள். அன்றிரவு கஞ்சித்தண்ணீர் ஊற்றுவதற்காக வந்து, மாமி, சட்டியை எடு என்றாள். உடனே பாட்டி அந்தப்பையைக் கலகலவென்று இழுத்து துடையின் கீழ் வைத்துக்கொண்டாள். இதைப் பார்த்துப் பிரமித்த நம் கதாநாயகி தன் புருஷன் வந்தவுடன் "என் மாமியாருக்கு சாதம் போடப்போனேன், ஒரு பையை இழுத்துத் துடையின்

அதி தீவிரமாய்ப் பிரசித்திபெற்று வருபவனை—அவனுக்கு ஏராளமாகக் கடன்கள் இருக்கிறதாம் என்று தூற்றி மதிப்பில் தாழ்த்துவது சிலரது வழக்கம். அதில் அவர்களுக்கு ஒரு திருப்திபோலும்.

கிழ் மறைத்துக் கொண்டார்கள். அது என்ன" என்று கேட்டாள். அதற் கவர் "அடி பைத்தியகாரி இத்தனை நாள் தெரியாதா உனக்கு; என் தாயா ரிடம் கொஞ்சம் சில்லரை இருக் கிறது. சரியாய் கவனித்துப் பார்" என்றார். அப்படியா என்று அவன் மலேத்து அன்றுமுதல் நம் சொர்ணம் பாட்டிக்குச் செய்துவந்த சம்ரக்ஷணையைச் சொல்லிமுடியாது. வாசகர் களே யூகித்துக்கொள்ளலாம். இப்ப டியே இரண்டு வருஷங்கள் கழிந்தன. வெறும் கஞ்சித்தண்ணீரை சாப்பிட்டு வந்த பாட்டி சொர்ணம்மாளுக்கு நல்ல பதார்த்த தினுசுகளும் பலகார வகைகளும் சாப்பிடவே போன பலம் திரும்பிவந்து, தெய்வச் செயலாய் இழந்த பார்வையும் கூடிவரப்பெற்று வஞ்சகியான மருகியையும் தன் கண் ணுல் கண்டாள். தன் பொக்கிஷப் பையால் வந்த வாழ்வு இதுவென்று அதைவெகு பத்திரமாய் ஒரு பெட் டியில் வைத்துப் பூட்டினுள். ஒரு மூலையிற் கிடந்த மாமி நல்ல கண் வெளிச்சத்துடன் வீட்டுக்கு நடுவில் வந்து உட்கார்ந்து தன் குமாரனுடன் சம்பிரமமாய்ப் புசிப்பதானுள். கொஞ் சம் மாமியின் அதிகாரமும் செய்து வந்தாள். பிறகு அவள் காலம் நெருங் கவே, எழுநாள் விடாத ஜ்வரம் வந்து கஷ்டப்படாமல் தன் குமாரனை மனஸ் பூர்வமாக வாழ்த்திவிட்டுக் கடவுள் பதமடைந்தாள். உடனே மருகி தனது மாமியின் பொக்கிஷப்பையை எடுத்துத் தன் தாயாரிடம் கொடுத்து இதைப் பத்திரமாக வைத்திரு என் ருள். பிறகு தன் கணவனையழைத்து, என் பிரியமான மாமியின் சவத்தைச் சம்பிரமமாக எடுக்கவேண்டும்; எப்படி என்றுல் வாழைச்சோலே, தென்னஞ் சோலே, நடபாவாடை, வெள்ளி அரிசி, பொன் அரிசி, வாழைப்பழம், சர்க்கரை வழங்கி பூந்தொட்டில் சிங் காரித்து வெகு டம்பமாய் எடுங்கள்" என்ருள். அதற்கு நாயக்கர் "நீ சொல்லுவதைப் பார்த்தால் அதிக பணம் செலவாகுமே" என்று சொல்ல, அதற்கவள் "நீங்களென்ன கைவிட்டு செய்யப்போகிறது என் மாமியிடம்தான் பணம் இருக்கிறதே இப்போது இக்காரியத்தை நடத்தி விட்டால் பிறகு எடுத்துக்கொள்ள லாம்" என்ருள். அவள் சொன்ன பிரகாரமே அவள் புருஷனும், மற்ற வர்களும் மிகத் தடபுடலாக சவத்தை கொண்டுபோனுர்கள். காஷ்டத்திற்கு நம் கதாநாயகியாகிய சொக்கம்மாள் வருகிறவர்களுக்கெல்லாம் மாரிழவு கொடுத்துக்கொண்டிருந்தாள். அவள் பணத்திற்கு அழுதாளே தவிர பிணத் திற்கு அழவில்லே. சுற்றிஅழுவும்போ து பணப்பையின் பேரிலேயே கவன மாய் "அம்மா! அதி பத்திரமே" என் ருள். இதைக்கேட்ட அவள் தாயார் அப்பணப்பையை முன்பே சோதித் தவளாதலால், "கூந்துராவாடு மோச காடே. மோசகாடே" என்ருள். அதையும் கவனியாமல் மாமிக்கு ரொம்ப உருக்கமாய் அழுதுவிட்டு ஸ்நானம் செய்தபிறகு பணப்பையண் டைப்போய் சங்கதி அறிந்து திடுக் கிட்டு, "பாவி மோசம் செய்தாளா! இப்பணப்பையை நம்பி நான் எவ்வ ளவு பணம் செலவு செய்து அவள் குடலுக்குப் போட்டதும் அல்லாமல் உன் அவிதிக்கிப் பிணத்தையும் சம்ப ரமாக எடுக்கச் சொன்னேனே, இப் பீங்கான் ஓட்டைநம்பிக் கடன்காரியா னேனே" என்று பின்னுமொரு முறை அழுது தீர்த்தாள், தன் புரு

நம்பிக்கை சீக்கிரத்தில் ஒழிவது வழக்கமில்லே. ஏமாற்றந்தான் ஒன்று தெளிவாய்த் தெரிந்த இடத்தில் கூட கொஞ்சம் நம்பிக்கை வைக்கும்படி தூண்டிவிட்டுக் கொண்டே யிருக்குமாம்.

ஷன் வந்ததும் "உன்பேச்சை நம்பி மோசம் போனேனே, உன் தாயார் வெறும் பீங்கான் ஓட்டையல்லவோ வைத்து இருந்தாள் என்றாள்." "அப்படியா பெண்ணே எனக்கும் தெரியாதே" என்று கோழிதிருடி கூடக் குலாவினதுபோல் கூறிவிட்டான். (பாட்டி கதை முடிந்ததும் பாவக்காய் காய்த்தது!) சகோதரிகளே. அந்த சொக்கம்மாளைப்போல் மாமியார் துரோகம் செய்யாதிருக்கும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

R. கோமளவல்லி அம்மாள்.



ஒருவர் தம்மைப்பற்றி அதிக நினைத்துக் கர்வித்துக்கொண்டால் அது ஒரு பாவமாகும் என்று மத நூல்கள் கூறுகின்றன—மகாத்மா.



ஏழாம் வால்யம் ஸம்பூர்ணம்.

# “ அமிர்த குணபோதினி ”

## ஆங்கிரஸ ஸ்ரீ வருஷத்திய பங்குனி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | தேதி | தேதி | வாரம் | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள், முதலியவை. |
|---|---|---|---|---|
| சி | 14 | 1 | செ | திரி-48-9. சித்-46-30, பிரம்மகல்பாதி. |
| சி | 15 | 2 | புத | சது-41-43, ஸ்வா-41-59, வியாஸராயர். |
| சி | 16 | 3 | வியா | பஞ்-35-19, விசா-37-23, தின்னனூர் கருடன். |
| சி-ம | 17 | (4-10) 4 | வெ | ஷஷ்-29-7, அநு-33-5. [துவயம் |
| சி | 18 | 5 | சனி | ஸப்-23-25, கேட்-29-15, சீதாதேவி விரதம். திதி |
| அ-சி | 19 | 6 | ஞா | அஷ்-18-18, மூல-26-1, கரிநாள். |
| உ-ம | 20 | 7 | திங் | நவ-13-54, பூரா-23-32. |
| பி-சி | 21 | 8 | செ | தச-10-21, உரா-21-52, மேஷாயனம் 2-20. |
| சி-பி | 22 | 9 | புத | ஏகா-7-39, ஶ்ரவ-21-6. |
| சி-ம | 23 | 10 | வியா | துவா-5-53, அவி-21-13. |
| சி | 24 | 11 | வெ | திர-5-5, சத-22-17. |
| ம-சி | 25 | 12 | சனி | சசி-5-19, பூட்-24-25. |
| அ | 26 | 13 | ஞா | ● 6-37, உட்-27-34. |
| சி | 27 | 14 | திங் | பிர-9-2, ரே-31-47, சைத்ரசுத்தம், யுகாதி, ஸ்வேதவராஹகல்பாதி. |
| சி | 28 | 15 | செ | துவி-12-34, அசு-37-4, கரிநாள், ஸௌபாக்கிய உமாவிரதம். ஜில்ஹேஜ்ஜீ 1உ |
| சி-அ | 29 | 16 | புத | திரி-17-9. பர-43-18. [தாழி, லக்ஷ்மீ விரதம். |
| ம-உ | 30 | 17 | வியா | சது-22-32. கிரு-50-12, ராஜமன்னார் வெண்ணெய் |
| ம-சி | 31 | 18 | வெ | பஞ்-28-33. ரோ-57-38, வஸந்த பஞ்சமி. |
| சி | ஏப்ரல் 1 | 19 | சனி | ஷஷ்-34-45, மிரு-60-0, கரிநாள். |
| சி | 2 | 20 | ஞா | ஸப்-40-34, மிரு-5-0, ஸந்தான ஸப்தமி. |
| சி | 3 | 21 | திங் | அஷ்-45-31, ஆரு-11-46, அசோகாஷ்டமி. |
| அ-சி | 4 | 22 | செ | நவ-49-11, புந-17-28. |
| சி | 5 | 23 | புத | தச-51-3, பூச-21-44, திருநாராயணபுர வைரமுடி, தர்மராஜதசமி. |
| சி | 6 | 24 | வியா | ஏகா-50-58, ஆயி-24-2, டோலோத்ஸவம். [தசி- |
| ம-சி | 7 | 25 | வெ | துவா-48-51, மக-24-30, மயிலை ரதம், வாமனதுவா |
| சி உ | 8 | 26 | சனி | திர-44-53, பூர-23-5, மயிலை அறுபத்துமூவர். |
| அ | 9 | 27 | ஞா | சசி-39-21, உத்-20-1. பங்குனி உத்திரம். |
| சி-பி | 10 | 28 | திங் | ○ 32-32, ஹஸ்-15-33, மதனபூர்ணிமை, மஹா சைத்ரீ, கந்தபொடி வஸந்தம். |
| சி | 11 | 29 | செ | பிர-24-53. சித்-10-3, சைத்ர பகுளம். |
| சி-அ | 12 | 30 | புத | துவி-16-44, ஸ்வா-3-56, உப-53-38, திதிதுவயம். ஸ்ரீமுக ஸ்ரீ வருஷ சித்திரை மீ |
| சி-பி | 13 | 1 | வியா | திரி-8-27, அநு-51-26, மேஷரவி-6-53, விஷு வத் புண்ணியகாலம். |

| | | | |
|---|---|---|---|
| ரவி சு-பு | | | |
| ராகு | 15உ-க்கு ராசி | | |
| சனி | | | குஜ குரு கேது |
| | | | |

“ அமிர்த குணபோதினி ” பிரஸ், 158A, பிராட்வே, சென்னை—1933.